# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 4-15 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 4-15 | ,, | 4-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 4-30 | ,, | 5-00 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 5-00 | ,, | 5-30 | , | முதல் மணி, சாத்துமுறை |
| 5-30 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 1-30 | ,, | 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 1-30 | ,, | 7-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | இரவு கைங்கர்யம், |
| 8-30 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | | | | ஏகாந்த சேவை (ஏகாந்தம்) |

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | சஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | இரவு | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியவைகள் |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 | , | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி, திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை |
| 11-00 | ,, | 7-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 7-30 | இரவு | சுத்தி முதலியவை |
| 7-30 | ,, | 9-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9 00 | ,, | 11-30 | ,, | பூலங்கி (ஆர்ஜிதம்) |
| 11-30 | ,, | 11-45 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-45 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யங்கள் இரவு மணி |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

குறிப்பு : விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சி நிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.



ஆக்ஞாம் க்யாதிம் தநமனுசராந் ஆதி ராஜ்யாதிகம் வா
காலே த்ருஷ்ட்வா கமல வஸதோப்யகிஞ்சித் கராணி ।
பத்மா காந்தம் ப்ராணிஹிதவதீம் பாலநே நந்ய ஸாத்யே
ஸாராபிஜ்ஞா: ஜகதி க்ருதிந: ஸம்ச்ரயந்தே தயே த்வாம் ॥

*ஸாரம் அறிந்தவர்களான மஹான்கள் தயாதேவியான உன்னையே சரணமடைகின்றனர். இதற்கு முக்கிய காரணம் ஒன்று உண்டு. பெருமாளுடைய நாபீகமலத்தில் தோன்றிய பிரமனிடம் உலகைக் காக்கும் பொறுப்பை நீ அளிக்கவில்லை. பிரமனும் ஆணையிடும் தகுதி, புகழ், செல்வம், பணியாட்கள், பேரரசு இவையனைத்தும் பெற்றும் ஒரு காலத்தில் பயன்படாமல் திண்டாடுவதைக் கண்டு விட்டாய். ரக்ஷிப்பது என்பது பிறருக்கு எவ்வகையிலும் ஒவ்வாது! கமலையின் கணவனே அதற்கு ஏற்றவன் என்று அவனை நீ அமர்த்தியதே காரணமாம்;*

—தயா சதகம்—ஸ்ரீ வேதாந்த தேசிகன்.






# ஸப்தகிரி

மலர்: 9 நவம்பர் 1978 இதழ் 6

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. ஆனந்தராவ் முதலியார்,
B.SC., LL.B.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer.
Publication Section,
T T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப் படம்: கபிலதீர்த்தம்-திருப்பதி.

# ஆசிரியர் உரை

''கொதித்துப் பொங்கும் ஸுராபானத்தை குடிகாரனின் தொண்டையிலே ஊற்றி, அவனைக் கொல்ல வேண்டும்.'' ''அந்தணன் கள் குடித்தானாகில் அவனுடைய நெற்றியில் கள்ளு மொந்தைபோல் நெருப்பினால் சுட்டு, வடு உண்டாக்கி அவனைச் சமூக பிரஷ்டம் செய்ய வேண்டும்'' ''கொலை கொள்ளை ஆகியவற்றைவிட கட்குடி மிகவும் பயங்கர பாவமாகக் கருதப்படுவதால், குடிகாரனுக்கு ஞாலம் நடுங்கும் வகையில் தண்டனை வழங்கப்பட வேண்டும்'' இவையெல்லாம், மதுவிலக்கினைத் தீவிரப் படுத்த வேண்டி எந்த ஒரு மாநில அரசினாலும் கொண்டு வரப்பட்ட தீர்மானங்கள் அல்ல. மதுவின் பயங்கரத்தை, அதன் அபாயத்தை கருத்திற்கொண்டு அன்றே மனுநீதி போன்ற தரும சாஸ்திரங்களால் பரிந்துரைச் செய்யப்பட்ட ஆலோசனைகளேயாம் மேற்கூறியவை. ஒருவனுடைய ஆன்ம நலனைப் பாதிக்கும் வகையில் கட்குடி திகழுகின்றது. பல தீச்செயல்களுக்கு வழிகாட்டியாக மது விளங்குகிறது. இருப்பவனையும் இல்லாதவனையும், கற்றவனையும் கல்லாதவனையும் சரிசமமாக்கும் பெருமை ஏழ்மைக்கு மட்டுமின்றி மதுவுக்கும் உண்டு. ஏழ்மை, அவனுக்கு அநுபவம் தந்து அவனைப் பண்படுத்தவும் செய்யலாம். ஆனால் மதுப்பழக்கம் மனிதனை என்றென்றும் சமுதாயத்தில் தலை தூக்காதபடி செய்துவிடும்.

ஒருவனது அறிவொளியும், தேக ஒளியும், செயல் திறனும் கட்குடியால் மறைந்துவிடும் என்பதை மனதிற்கொண்டு, கள்ளுண்ணாமைக்கு ஒரு தனி அதிகாரமே எழுதிப் போன வள்ளுவன் ''உண்ணற்க கள்ளை உணில் உண்க சான்றோரால்-எண்ணப்பட வேண்டாதார்'' என்று குடியின் இழிவை நயம்படக் குறிப்பிடுகின்றார். மதுவினால் அறிவு மயங்க, அதனால் பெண் மோகம் உண்டாக கற்புநிலை கெடுகிறது; பொருள் கரைகிறது; கற்ற கல்வியின் பெருமை அழிகின்றது; நல்லோர் இணக்கம் நலிகின்றது. அம்புப்படுக்கையில் பீஷ்மர் தருமனுக்கு கூறும் கீழ்வரும் அறிவுரை நினைத்தற்குரியது: 'மக்களிடையே நன்டைத்தையும், கற்பும் நிலவ வேண்டுமாயின் மதுவை விலக்கியே ஆக வேண்டும். இல்லாவிடின் உலகில் சத்தியமும், தருமமும் அழியும்; பொறுப்புணர்ச்சி மறையும்'' மதுப்பழக்கத்தின் இழிவினை ஒரு வடமொழி ஸ்லோகம் அழகாக எடுத்துரைக்கிறது: 'நாலு வேதங்களை ஒரு தட்டிலும், பிரம்மசரியத்தை மறுதட்டிலும் வைத்தால் துலாக்கோல் சம எடையைக் காட்டும். அது போன்று ஸகல பாவங்களையும் ஒரு தட்டிலும், கட்குடியை மறு தட்டிலும் வைத்தால் எடை சமமாக விளங்கும்.' மனத்தடுமாற்றங்களுக்கு மூலகாரணமாக மதுப்பழக்கம் விளங்குகிறது. ஆகையால்தான் மேலை நாடுகளில் கொலைகள், கற்பழிப்புகள், விவாகரத்துக்கள் போன்ற உணர்ச்சி வசப்பட்டு நிகழும் குற்றங்கள் மலிந்து காணப்படுகின்றன. ஆகவே பல தீமைகளுக்கு வித்திடும் மதுவை விலக்க சம்பந்தப்பட்ட அரசுகள் துணிவுடன் முன் வரவேண்டும். குறிப்பாக ஆந்திர அரசு இவ்விஷயத்தில் அதிக கவனம் செலுத்துதல் அவசியம். வருமானத்தை எதிர்பார்த்து, மனிதனின் வருங்காலத்தை குலைத்துவிட எந்த விதத்திலும் அரசு தன்னைக் காரணமாக்கிக் கொள்ளக்கூடாது. தன் குழந்தைக்கு எது தீமை எது நன்மை என்பதை எப்படி ஒரு தாய் அறிந்து செயல்படுவாளோ, அஃதே போன்று அரசும் மனிதனின் ஆன்மநிலை ஆரோக்கியமாக விளங்க தன்னாலியன்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் நன்று.

இந்திய மண்ணின் சிறப்பு அதன் சமய வாழ்வில்தான் அடங்கியுள்ளது. சமயக் கோட்பாடுகளையே தன் சமூக கோட்பாடுகளாகக் கொண்டு விளங்கும் புண்ணிய பாரதத்தின் கலாசார நிலையங்களாக அங்குத் திகழும் யாத்திரைத் தலங்கள் விளங்குகின்றன. உலக ஆன்மீக வாழ்வுக்கு வழிகாட்டியாக இலக்கியச் சிறப்பும், சரித்திரப் பெருமையும் கொண்ட பல சமயஞ்சார்ந்த கோயில்கள் ஆந்திராவில் அமைந்துள்ளன. இக்கோயில்களுக்கு, அவை அமைந்துள்ள ஸ்தலங்களுக்கு ஆண்டு தோறும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து பக்தர்கள் வருகை புரிகின்றனர். அவ்வாறு வரும் யாத்திரிகர்களில் இளைஞரும், நடுவயதினரும் பெரும் பங்கு உள்ளனர். புதிய இடத்தால் புதிய சூழ்நிலையால் சூழும் அவர்களைக் கவரும் விதத்தில், அவர்களை மயக்கும் விதத்தில் யாத்திரைத் தலங்களில் மதுபானக்கடைகள் அமைந்துள்ளன. மனிதன் பலவீனங்களின் மொத்த உருவம்தானே. ஆகவே மதுவுக்கு ஆட்படுதற்குரிய ஒரு வாய்ப்பு அங்கு உண்டாகி விடுகின்றது என்பது மறுக்க முடியா உண்மை. எனவே மனதை சஞ்சலப்படுத்தும் மதுவினை, மாநில அளவில் விலக்கா விட்டாலும், ஆன்மநிலை உயர வழிவகுக்கும் யாத்திரைத்தலங்களிலாவது மதுவிலக்கினை தீவிரப்படுத்த அரசு முன் வர வேண்டும். கட்குடியர்களை திருத்த முடியாவிட்டாலும், புதிய பத்து கட்குடியர்களை உற்பத்தி பண்ணாதிருந்தால் அதுவே அரசின் வெற்றியாக, அதன் இலட்சியம் சீரியதாகக் கருதப்படும்.

'பாலாஜி' என்று வடநாட்டாராலும், 'ஏழுமலையான்' என்று தென்னாட்டவராலும் தொழப்பெற்று, நாள் தோறும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் வருகை புரியும் புனிதத் தலமாக திருப்பதி விளங்குகிறது. அவ்வாறு வரும் யாத்திரிகர்களில் ஒரு சிலர், இறைவன் தரிசனத்திற்காக வந்தாலும், திருமலைக்கு வருவதை ஒரு உல்லாசப் பயணமாகவும் கருதுகின்றனர். அத்தகைய ஒரு சிலரை ஊக்குவிக்கும் விதத்தில் திருப்பதியில் மதுபானக்கடைகள் செயல்படுவது அவர்களைக் கெடுப்பதற்குத் துணைபுரிவதாக அமையும். திருமலையில் மது அருந்துவதையும், மாமிசம் உண்பதையும் தடுக்கப்படும், விதத்தில் சட்டம் இருந்தாலும், அச்சட்டத்தை மீறும் வகையில் பலருக்கு வாய்ப்பளிக்கும் விதத்தில் திருப்பதியில் மது விற்கப்படுவது வேதனைக்குரிய நிகழ்ச்சியாகும்.

எனவே மாநிலத்தில் மது விலக்கினை அமுலாக்க அரசு தயங்கினாலும், மாநிலத்திலுள்ள யாத்திரைத் தலங்களில், குறிப்பாக திருப்பதியில் மது விலக்கினை தீவிரப்படுத்த அரசு தகுந்த முயற்சிகளை விரைவில் மேற்கொள்ளுமாயின், திருமலை திருப்பதி தேவஸ்தானம் என்றென்றும் ஆந்திர மாநில அரசுக்கு கடமைப்படும்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(11-9-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:)

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலுக்கு அன்றாட நைவேத்திய நிகழ்ச்சிகளுக்காக அனுப்புதற்கு ரூ. 6 இலட்சத்திற்கும் மேலான மதிப்புள்ள வாசனைப் பொருட்கள், மளிகைச் சாமான்கள் திருப்பதி தி. தி. தேவஸ்தானத்தாரின் பொதுப்பணித் துறைக்கட்டடக்கிடங்கில் எப்போதும் உள்ளன. மேலும் ரூ. 10 இலட்சத்திற்கும் மேலான தி. தி. தேவஸ்தான வெளியீடுகள் (புத்தகங்கள்) தி. தி. தேவஸ்தான அச்சுக்கூடத்தின் கட்டடக்கிடங்கில் உள்ளன. மேற்கூறிய வற்றை தீ, திருடு போன்றவற்றிலிருந்துகாக்கும் விதத்தில் அப்பொருட்களினைகாப்பீடு செய்தற்கு குழு அனுமதி யளித்துள்ளது. மேற்படி முடிவு அரசு ஒப்புதலுக்காக, ஆந்திர மாநில அறநிலையத்துறைக்குப் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது.

கர்நாடக மாநிலம் சிருங்கேரியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் சத்திரக் கட்டடத்திற்குமேல் முதல்தளம் ஒன்றினைக்கட்ட குழு ரூ. 5 இலட்சம் ஒதுக்கியுள்ளது.

காளஹஸ்தியில் தி. தி. தேவஸ்தான திருமண மண்டபத்தில் உணவுக் கூடம் ஒன்றினைக்கட்டுதற்கு ரூ. 2.05 இலட்சம் ஒதுக்க குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரியிலிருந்து அலிபிரி வரை உள்ள திருமலைக்குச் செல்லும்படியான போக்குவரத்து நெருக்கடிமிக்க சுமார் 3,500 மீட்டர் நீளமுள்ள சாலையினை மேலும் விரிவுப் படுத்த குழு 3,20,000 ஒதுக்கியுள்ளது.

புது தில்லியில் தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்லூரிக்கு அருகே உள்ள, அக்கல்லூரியின் 3-வது, 4-வது வகுப்பு ஊழியர்களின் குடியிருப்புக் கட்டடங்களின் மேல் முறையே முதல் தளம், இரண்டாம் தளம் கட்டுதற்கு ரூ. 5.53 இலட்சம் ஒதுக்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதியில் தி. தி தேவஸ்தானத்தின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா மாட்டுப் பண்ணையில் உள்ள, அப்பண்ணையின் மேற்பார்வையாளர் தந்துள்ள பட்டியலின்படி, பயனற்ற அதாவது நஷ்டம் ஏற்படுத்தும் வகையில் உள்ள பிராணிகளை விற்றுவிடுவதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரியில் 'ஹோம் சயன்ஸ்' கட்டடத்தின்மேல் உள்ள முதல் தளத்தில் வகுப்பறைகளைக் கட்டுதற்குக் குழு ரூ. 1,92,000 ஒதுக்கியுள்ளது.

அரசு மருத்துவ மனைகளில் வழங்கப்படுவதைப் போன்று, தி. தி. தேவஸ்தான மருத்துவ மனைகளில் இரவு வேளைகளில் பணிபுரியும் மருத்துவ அலுவலர்களுக்கு நாள் ஒன்றிற்கு ரூ. 5-ஐ இரவுப்படியாக வழங்க குழு அனுமதியளித்துள்ளது.

'திருப்பதி வழி காட்டி' எனும் ஆங்கிலக் கையேட்டினை, ரூ. 10-க்கும் மேலாக தி. தி. தேவஸ்தான வெளியீடுகளை (புத்தகங்கள் அல்லது வண்ணப்படங்கள்) வாங்குவோர்க்கு இலவசமாக வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஹைதராபாத்தில் ராம்நகர் குடியிருப்புப் பகுதியில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா திருமண மண்டபம் ஒன்றினையும், பொது அரங்கு ஒன்றினையும் கட்டுதற்குக் குழு ரூ. 70,000 ஒதுக்கியுள்ளது.

கர்நாடக மாநிலத்தில் பெங்களூரிலுள்ள டோம்லூரில் விளங்கும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா சேவா மண்டலிக்கு ஸ்ரீ வேங்கடேஸ்வரர், ஸ்ரீபத்மாவதி தாயார், ஸ்ரீ கருடாழ்வார் ஆகியோரின் விக்ரகங்களை இலவசமாக வழங்க குழு தீர்மானித்துள்ளது.

★

---

இவ்வருட பிரம்மோற்சவத்தின்போது....

*2,11,000 யாத்திரிகர்கள் திருமலையில் இறைவனைத் தரிசித்தனர்.*

உண்டி வருமானம்

ரூ. 30,00,000

7.5 கிலோ கிராம் எடை தங்கம்

33.5 கிலோ கிராம் எடை வெள்ளி

டிக்கட் ஒன்று ரூ. 25 வீதம் சிறப்புத் தரிசின டிக்கட்டுகள் ரூ. 4,00,000-க்கு விற்பனையாயின.

---

## சந்தாதாரர்களுக்கு...

31-12-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன; ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

4, 16, 18, 22, 31, 35, 41, 44, 63, 100, 118, 119, 128, 211, 221, 395, 433, 465, 590, 592, 608, 609, 619, 623, 642, 645, 654, 668, 677, 685, 705, 747, 754, 772, 924, 928, 934, 961, 970, 989, 999, 1009, 1454, 1462, 1475, 1482, 1515, 1517, 1519, 1521, 1523, 1532, 1536, 1537, 1540, 1541, 1543, 1545, 1546, 1550, 1551, 1558, 1559, 1560, 1563, 1564, 1565, 1566, 1570, 1571, 1572, 1588, 1592, 1835, 1836, 2193, 2247, 2248, 2249, 2251 முதல் 2274 வரை, 2276 முதல் 2283 வரை, 2285, 2286, 2287, 2289 முதல் 2330 வரை, 2332, 2334 முதல் 2341 வரை, 2349, 2389, 2411, 2497, 2556.

# கம்பனின் கார் கால நிலை

காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் முதுவேனில் என்றுங்கு
இருமூன்று வகைப்பருவம் தானே:
ஆவணி முதலா இரண்டு இரண்டாக
மேவிய திங்கள் எண்ணினர்
கொளலே.''
—பிங்கலந்தை.

இங்ஙனம் கூறிய பிங்கல முனிவர் பருவங்களை வர்ஷருது, சரத்ருது, ஏமந்தருது, சிசிரருது. வசந்தருது, கிரீஷ்மருது என வடமொழியில் கூறி வருகின்றனர். ருது, பருவம் எனக் காலக் கூறுகளுக்கு முன்னோர் பெயர்கள் குறித்திருப்பது மிகவும் நயமுடையது. இன்ன பருவத்தில் இன்ன காரியங்கள் செய்ய உரியன என்று வரையறுத்து வந்ததால் பருவம் அறிந்து

திரு. கே. வி. இராஜன்,
மதுரை.

செய்யும் செயல்களில் பலன்கள் பெருகிக் கொண்டு வந்தன. பருவ வருணனை காப்பியங்களுக்கே ஒரு சிறந்த பகுதிதான். வடமொழியில், காளிதாஸன் ''ருது ஸம்ஹாரம்'' என ஒரு தனிப்பெருங் காப்பியத்தையே உருவாக்கினன். வேனிற் காதையை பருவங்களைப் போற்றுவதாக அமைத்துக் கொடுத்திருக்கிறார் இளங்கோவடிகள். ''உதய மால் வரை உச்சித்தோன்றி உலகு விறங்கவி ரொளி மலர்கதிர் பரப்பியதையும்'' என பறைசாற்றுகிறது சிலம்பு.

தனி மனிதனின் சிறப்புக்கூறுகளும் சமுதாய வேறுபாடுகளும் ஒன்றாக இணையும் களமாக காப்பியங்கள் அமைகின்றன. இனிமையான தென்றலை கேரள மகாகவி குமாரனுசான் ஸ்வப்பன வாசுவதத்தையில் ''தொட்டுச் சென்ற இளந்தென்றலால் பட்டுச்சேலையின் மடிப்புகள் சிறிதே கலைந்து வர, பூச்சூடிப் பூத்துக் குலுங்கிய அசோக மரநிழலில் கலைந்த வகுடைக்கோதிக் கொண்டு அமர்ந்திருந்தாள்'' என்று கூறுகிறார். இயற்கையின் மற்ற எந்த உயிரும் செய்யாத ஒன்றை மனிதன் செய்கிறான். உள்ள வாய்ப்புகளைக் கொண்டு வாழ்க்கையை சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு வளப்படுத்த முயல்கிறான். புரிந்து கொள்ள முடியாத விதியின் வலிமைக்கு ஆட்பட்ட மனிதனில் இவ்வுலக வாழ்வு வினைப் பயனுக்குத் தக்கதாக அமைகிறது என்று பழைய சமயங்கள் கூறும் கூற்றை ஏற்றுக் கொள்ளாத வகையில் துன்பம் நின்று விடுவதில்லை.

சீதையின் பிரிவால் இராகவன் தன் நிலையிழந்து மெய் மறந்து இருக்குங்கால் கார்காலம் வந்துவிட்டதாய் மேகங்கள் கூட்டமாக வந்து வானத்தைக் கவ்விக் கொண்டன. மின்னல் மின்னி இடி இடித்து மழை பொழிகிறது. இராகவன் விண்ணை நோக்கும் பொழுது மின்னல் கொடியில் சீதையின் இடையைக் காட்டுகின்றன. மேகங்கள், சீதை இங்கேதானிருக்கிறாள் என்று முழங்குகிற மாதிரி ஒலித்தன. மின்னல்கள் மின்னி மறைகின்றன.

அத்தகைய காலத்தை எதிர்நோக்கி இக்காவ்விய நாயகன் ஸ்ரீ இராகவன் தனியே இருக்குங்கால் இடையே நேர்ந்த பருவ காலங்களின் நிலையை கம்பர் வாயிலாக அறிய நிற்கின்றோம். ஒரு ஆண்டு ஆறு பருவங்களாகப் பிரிக்கப்பட்டு ஐப்பசி, கார்த்திகை-கூதிர்யென்றும், மார்கழி, தை-முன்பனியென்றும், மாசி, பங்குனி-பின்பனியென்றும், சித்திரை, வைகாசி-இளவேனில் யென்றும், ஆனி, ஆடி-முதுவேனில் யென்றும் வழங்கி வந்தனர். காலம் வகையால் ஞாலம் இயங்குகின்றது. கதிரவன் இயக்கத்தைக் கொண்டே நாம் காலத்தைக் காண்கிறோம். தை மாதம் முதல் ஆனி இறுதியான ஆறுமாதங்களும் சூரியன் வடபால் சாய்ந்து வருவதால், அதற்கு உத்திராயணம் எனப்பெயர் வந்தது. ஆடி முதல் மார்கழிவரை தென்திசை தோய்ந்து வருதலால், அதற்கு தக்ஷிணாயனம் எனப்பெயர் இட்டனர் நம் முன்னோர்கள். இராமன் கிஷ்கிந்தையில் கிரி வாசம் செய்தது ஆவணி மாதமாகையால் அயனும் பருவமும் அறியக் கிடக்கின்றன. அதில் காண்கின்ற சில காட்சிகளை கம்பநாட்டாழ்வார் நமக்கு தெளிவாகப் புலப்படுத்துகின்றார்.

'' பையணைப் பஃறலைப் பாந்தள் ஏந்திய
மொய்ந்நிலத் தகளியின் முழங்கு
நீர்நெயின்
வெய்யவன் விளக்கமா மேருப்
பொன்திரி
மையெடுத்து ஒத்தது மழைத்த
வானமே.

நஞ்சினின் நிளிர் நெடுங் கடலின்
நங்கையர்
அஞ்சன நயனத்தின் அவிழ்ந்த
கூந்தலின்
வஞ்சனை அரக்கர்தம் வடிவின் செய்
கையின்
நெஞ்சினின் இருண்டது நீலவானமே.

வண்ணவிற்கர தலத்து அரக்கன்
வாளினன்
விண்ணிடைக் கடிது கொண்டு ஏகும்
வேலையில்
பெண்ணினுக்கு அருங்கலம் அனைய
பெய்வளை
கண் எனப்பொழிந்தது கால
மாரியே.''
—கம்பர்.

கால மழை பெய்யும்பொழுது இஞ்ஞாலம் உள்ள நிலைமைகளை தெளிவாக விவரிக்கிறார் கம்பநாடர். தக்ஷிணயன காலத்தில் சூரியன் தென்புறம் சாய்ந்து வருவதால் அந்நிகழ்ச்சியை காவிய கதையோடு தொடர்பாய் வளர்க்கப்பட்டு. வருகின்றது. சீதையைத் தேடிவரும் பொருட்டு வடதிசையிலிருந்து வானவர் தலைவன் ஏவிய தூதுவன் போல் சூரியன் தென்திசை நோக்கி ஏகினன் எனக் கூறுகிறார்.

# கண்ணனெம்பெருமானே காத்தருள வாராய்!

இரா. ஸ்ரீநிவாஸதேசிகன், விழுப்புரம்.

அமரர்கள் தலைவனே கண்ணா!
அரும்பெரும் மன்னனே கண்ணா!
திருமகள் துணைவனே கண்ணா!
திருவோணத்துதித்தவனே கண்ணா!

குரு கூர்மாறன்பாடிய கண்ணனே கண்ணா!
குடக்கூத்தாடியவனே கண்ணா!
குலசேகரனுக்கருளியவனே கண்ணா!
குலவிளக்காய் நிற்பவனே கண்ணா!

முதலாழ்வார்கள் பாடல் பெற்றோனே கண்ணா!
முப்புரி நூலணிந்தவனே கண்ணா!
முதல் முடிவற்றவனே கண்ணா!
முதலைவாய் துணித்தவனே கண்ணா!

ஆய்ப்பாடியில் வளர்ந்தவனே கண்ணா!
ஆயர்கள் போரேறே கண்ணா!
ஆநிரை மேய்த்தவனே கண்ணா!
ஆடுபுட்கொடி ஆதிமூர்த்தியே கண்ணா!

கார்முகில் வண்ணா கண்ணா!
காட்சிக்கினியனே கண்ணா!
காயாம்பூ நிறவண்ணனே கண்ணா!
காத்தருள வாராய் கண்ணா!

குழலூதி நின்றவனே கண்ணா!
குன்றெடுத்தாநிரை காத்தவனே கண்ணா!
குறிய மாணுருவாகிய கண்ணா!
குறிப்பெனக்கருள்வாய் கண்ணா!

கோதை மணாளனே கண்ணா!
கோக்களைக் காத்தவனே கண்ணா!
கோவலர் பெருமானே கண்ணா!
கோவிந்தனென்னும் தெய்வமே கண்ணா!

நப்பின்னை மணாளனே கண்ணா!
நானிலம் போற்றும் கண்ணா!
நான் மறைச்சாரமே கண்ணா!
நாள்தோறும் நான்வணங்கும் கண்ணா!

பார்த்தனுக்குத் தேரூர்ந்தவனே கண்ணா!
பாரதப்போர் முடித்தவனே கண்ணா!
பாரெல்லாம் புகழநின்றவனே கண்ணா!
பாரேறு பெரும்பாரம் தீர்த்தவனே கண்ணா!

பெரியாழ்வார் மருகனே கண்ணா!
பேராயிரமுடையோனே கண்ணா!
பேர்த்தொரு தாயில்வளர்ந்தவனே கண்ணா!
பேரானைக்கருளியவனே கண்ணா!

காத்தருளவாராய் கண்ணா!



தனது ஆவி அனைய தேவியைக் கண்டு வரும்படி இராமபிரான் அனுமனை அனுப்பும்முன் தேவர்பிரான் ஆதவனை தூது அனுப்பியது போல் தென் திசை இயக்கம் சிறந்த காட்சியாகப் பரிமளிக்கிறது.

காலத்தின் பருவங்கள் ஒன்புறம். சீதாப் பிராட்டியை பிரிந்து வாடுவது மறுபுறம். இருப்பினும் இப்பருவ காலத்தில் மழையின் வலிமை தரையைக் குளிரச் செய்வதால் கம்பர் பெருமானுக்கு இயற்கை காட்சிகள் தானாகவே முன் வந்து நிற்கின்றன. நல்ல நீலத்தை இந்திர நீலம் என்று கூறுவர். அதுபோல், மழைக்காலத்தில் தரையெங்கும் ஊர்ந்து திரியும் சிகப்பு நிறமுள்ள பூச்சிகளை இந்திர கோபம் என்று கூறுவர். இவ்விதமான வெறுப்படையக்கூடும் பூச்சிக்கு ஈயல், மூதா, தம்பலம் எனப்பல பெயர்கள் உண்டு ''சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும்'' எனக் கூனி கூறிய படி மேனிகள் அமைந்தவர்கள், உயிரினும் இனியாகக் காதலித்தவர்கள், அந்த ஆதரவில் அதரத்தின் நினைவு துயரத்தில் வந்தது. நினைவைத் தூண்டி கவலைகளைப் பெருக்கி வெஞ்சினத்தைமூட்டி கொடுமைகள் புரிந்தன. மனைவியின் இனிய செவ்வாய் இதழ்போல் தோன்றித் தாபத்தை விளைத்தமையால் இந்திர கோபம் ஆபத்தைத் தூண்டுகின்றன.

ஏற்கெனவே, இராவணன் சீதா பிராட்டியாரைக் கவர்ந்து சென்றதால் இலங்கேசுவரன்மேல் உண்டான கோபமும், மேகவாகனன் என்று கூறும் இந்திரன் ஏவலால் மழை பெய்து, அக்காலத்தில் பரவி வரும் இப்பூச்சிகள் இந்திர கோபமாகி, இராகவனின் துயரத்தை மிகுதிப்படுத்தும் செயல்களும், இயற்கை என்பதற்கு மாறாக இராமனை துன்புறுத்துகின்றன. இத்தம்பலக் குப்பையென்று கூறும் இந்திர கோபமும், கார்காலமும் நம் காவியத் தலைவனுக்குக் கொடுக்கும் இடர்கள் கணக்கில் அடங்கா. கார்மேகம் போன்ற கரிய நிறச்செம்மல் இராமனே இக்கார்காலத்தின் இனிய முடிவைக் காண்கின்றார்.



தொடர் கட்டுரை

# கீதை காட்டும்

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.




# நல்வழி

அத்தியாயம்–10
விபூதி யோகம்
பகுதி – 4

விலையுயர்ந்த பொருள் நம்மிடம் பலகாலமாக இருந்தும், அதனது அருமையையும், பெருமையையும் நாம் உணராவிட்டால் அந்தப் பொருள் நம்மிடம் இருந்தும் இல்லாததும் ஒன்று தானே!

அரசனொருவன் வேட்டையாடச் சென்ற சமயத்தில் ஒரு சமயம் காட்டில் வயதான கிழவனொருவன் மிகுந்த சிரமப்பட்டு விறகுகளை வெட்டி அந்தக் கட்டைகளைக்கரியாக்கி விற்று மிகுந்த சிரமப்பட்டு வாழ்க்கை நடத்துவதைக் கண்டான். அவன் மீது அரசன் இரக்கம்கொண்டு, ''இதோ இந்தக் காட்டை உனக்கே அளிக்கிறேன். உனது ஏழ்மை அகலட்டும்'', என்று அந்தக் காட்டை அவனுக்கு அளித்துச் சென்றான். அது சந்தன மரக்காடு. ஆனால் அவை சந்தன மரங்கள் என்ற விபரம் அந்தக் கிழவனுக்குத் தெரியாது. எனவே அவன் முன்பு போலவே மரங்களை வெட்டிக் கரியாக்கி விற்று தனது வாழ்வை நடத்தி வந்தான். ஆனால் ஒரு சிறு வேறுபாடு. முன்னர் அவன் பயந்து பயந்து மரங்களை வெட்டினன். இப்பொழுது காடு அவனுடையதல்லவா! எனவே பயமின்றி மரங்களை வெட்டித் தீர்த்தான்.

சில காலத்திற்குப் பிறகு அந்தக் கிழவன் எவ்விதம் மாடமாளிகை கட்டி சௌகரியமாக இருக்கிறான் என்பதை நேரில் கண்டு செல்ல அரசன் அந்தக் காட்டிற்கு வந்தான். வந்தவன் திடுக்கிட்டான். சந்தன மரக்காட்டில் ஒரு சில மரங்களே பாக்கியிருந்தன. மற்றவை எல்லாம் வெட்டித் தள்ளப்பட்டு விட்டன. அந்தக் கிழவன் முன்பு போலவே மரங்களை வெட்டி விறகாக்கித் தலையில் சுமந்து கொண்டிருந்ததைக் கண்ட அரசனது மனம் மிகுந்த வேதனைப்பட்டது.

**அரசன் :** கிழவா! நீ எவ்வளவு பெரிய முட்டாள். எப்பேர்ப்பட்ட தவறு செய்துவிட்டாய்?

**கிழவன் :** என்ன அரசே! நான் என்ன தவறு செய்து விட்டேன்?

**அரசன்:** விலையுயர்ந்த சந்தன மரங்களை வெறும் மரங்களாகக் கருதி அனைத்தையும் வெட்டிக் கரியாக்கிப் பாழ்படுத்தி விட்டாயே!

**கிழவன் ;** ஐயோ! அவை சந்தன மரங்கள் என அறியாது நான் மோசம் போய் விட்டேனே!

**அரசன் :** சரி போனது போகட்டும். இனி நீ வெட்டாது விட்டிருக்கும் மீதமுள்ள சில மரங்களையாவது நன் முறையே பயன்படுத்தி உனது ஏழ்மையைப் போக்கிக் கொள்

கிழவனும் அவ்வாறே செய்து செல்வந்தனானன்.

நமது வாழ்வு தான் சந்தன மரக் காடு. மறைநூல்கள், மகான்கள் யாவரும் வாழ்வின் அருமை பெருமை குறித்தும், அதை எப்படி இறை வழி பாட்டில் பயன்படுத்தி பெறற்கரிய பெருநிலையை அடையப் பயன்படுத்து வது என்பது குறித்தும் தெளிவாகக் கூறியிருக்கின்றனர். ஆனுல் நாமோ அந்தக் கிழவனைப் போல வாழ்வைச் சீட்டாட்டத்திலும், சினிமா, டிராமா பார்ப்பதிலும், மற்றக் கேளிக்கை களிலும் கரியாக்குகிறோம். பிறகு மீண்டும் இறைவன் குருவாய் வந்து நமக்கு அறிவுரை கூறுகிருர். அதைச் செவி மடுத்து அதன்படி நடந்தால் நாம் உயர்கதியை அடையலாம். இன்றேல் இன்னும் எத்தனை பிறவிகள் நமக் குண்டோ? நாமறியோம்.

அர்ஜுனன் பகவானது வார்த்தை களைக் கேட்டதும் தான் பெறற்கரிய தைப் பெற்று விட்டதாக உணர் கிருன்.

ஸர்வமேதத்ருதம் மன்யே
யன் மாம் வதஸி கேசவ ।
ந ஹி தே பகவன் வ்யக்திம்
விதுர்தேவா ந தானவா꞉ ‖14‖

'கேசவா! நீர் எனக்கு ஓதுவது யாவும் உண்மையென்று கருதுகிறேன். பகவானே! உமது தோற்றத்தை தேவர்களும் அறியார். அஸுரர் களும் அறியமாட்டார்.'



ஞான பிரஸூநாம்பிகை தாயார்-காளஹஸ்தி.
திரு. S. V. K. S. ஸ்ரீநிவாசஸன்-திருப்பதி.

டாக்டர் மிகத் திறமை வாய்ந்தவ ராக இருக்கலாம். அவர் கொடுக் கின்ற மருந்தும் மிகச் சக்தி வாய்ந்த தாக அமையலாம். இருப்பினும் நோயாளியின் நோய் குணமாவதற்கு இவற்றைத் தவிர மற்றொன்றும் தேவைப்படுகிறது. அதுதான் டாக் டர் மீது நோயாளி கொண்டுள்ள நம்பிக்கை! டாக்டரிடம் செல்லுமுன் பே ''இவரால் நம் நோயைத் தீர்க்க முடியுமா? இவர் கொடுக்கப்போகும் மருந்து நமது நோயைத் தீர்க்குமா? ஒரு வேளை அவரது வைத்தியம் இருக் கும் நோயைத் தீர்ப்பதற்குப் பதிலாக இன்னும் பல புதிய சிக்கல்களை உண் டாக்கி விட்டால் என் செய்வது?'' என்றெல்லாம் நோயாளி சந்தேகப் படத் தொடங்கி விட்டால் அவனது நோயைத் தீர்க்க எப்பேர்ப்பட்ட பிர பல வைத்தியராலும், எத்தகைய சக்தி வாய்ந்த மருந்திலுலும் முடி யாது.

எந்தக் காரியத்திலும் வெற்றி பெற அடிப்படைத் தேவை 'நம்பிக் கை' தான். தன்னம்பிக்கை என்ப தும் இறை நம்பிக்கை என்பதும் அடிப் படையில் ஒன்று தான். நாம் நமது அன்றாட வாழ்வில் யார் யாரையோ எதற்கெல்லாமோ நம்புகின்றோமே! குழந்தை தாயை நம்புகிறது. மனைவி கணவனை நம்புகிருள். கணவன் மனைவி யை நம்புகிருன். மகன் தந்தையை நம்புகிருன். இவ்விதம் ஒருவரை மற்ற வர் நம்பித் தான் வாழ்க்கை நடத்த வேண்டிய சூழ்நிலையில் நாம் இருக்கி ரோம். இந்த எல்லாவித நம்பிக்கை களும் சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டது. பிறரிடமிருந்து நமக்குக்

(33-ம் பக்கம் பார்க்க)

# புகழ் மணம் பரப்பும் சாரங்கபாணி ஆலயம்

வைஷ்ணவத்தையும், சைவத்தையும் புகழ் மணம் பரப்பச் செய்யும் பல புகழ் பெற்ற ஆலயங்கள் தென் இந்தியாவில் உள்ளன. இவ்வாலயங்கள் மூலம் நமது புனிதமான நாட்டின் பண்பாடு, கலாச்சாரம், ஆன்மீக நெறிகள் எவ்வாறு பாதுகாக்கப்பட்டு வந்தன என்பதை அறந்து கொள்ள முடிகிறது. தென் இந்தியாவில் அதுவும் தமிழகத்தில் உள்ள கும்பகோணத்தில் வைஷ்ணவத்தையும், சைவத்தையும் புகழ் மணம் பரப்பச் செய்யும் சான்றுகளாக பல ஆலயங்கள் இருக்கின்றன. வைஷ்ணவத்தின் பெருமையைக் கட்டிக்காக்கும் இந்நகரில் உள்ள பல ஆலயங்களில் சாரங்கபாணி ஆலயம் மிகவும் புகழ்வாய்ந்ததாகும். இவ்வாலயத்தில் உள்ள பெருமாளை வைஷ்ணவர்கள் ஸ்ரீரங்கத்தில் உள்ள ரங்கநாத பெருமாளுகவும், வட வேங்கடத்தில் உள்ள ஏழுமலையாளுகவும் நினைத்து சேவித்து வருகிருர்கள்.

12 ஆழ்வார்களிலே 7 ஆழ்வார்களான பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் திருமங்கை ஆழ்வார் — இவ்வாலய பெருமானின் புகழைப் பாடியிருக்கிருர்கள்.

திரு. எஸ். கண்ணன்,
சென்னை - 33.



ஆராவமுதன்

இவ்வாலயத்தின் மூலவருக்கு சாரங்கபாணி எனவும், உத்சவருக்கு ஆரா அமுதன் எனவும் அழைக்கப்படுகிறது. ஆரா அமுதன் என்ருல் தெவிட்டாத சுவை அமுதன் என்று பொருள். மூலவர் ஒய்யாரமாக சாய்ந்து கொண்டு ஆதிசேஷன் என்னும் பாம்பணையில் பள்ளி கொண்டிருக்கும் காட்சி (திருமழிசை ஆழ்வாரின் வேண்டுகோளை பூர்த்தி செய்யும் பொருட்டு) கண்ணிற்குத் தெவிட்டாத விருந்தாகவும், மனதிற்கு ரம்யமாகவும் இருக்கிறது. மூலவ உபய நாச்சியார்கள் (ஸ்ரீதேவி, பூதேவி) பகவானைத் தரிசிக்கும் நிலையில் இருப்பதை பார்க்கும் பொழுது பண்டைய கால கலைத்திறமை நன்கு விளங்குகிறது.

உத்சவமூர்த்தியான ஆரா அமுதன் சங்கு சக்கர கதாபாணியாய் கம்பீரமாக, தேன் சுவை தரும் இதழ்களிலே புன்னகையுடன் காட்சி அளிப்பதைக் காணும்போது நம் மனத்தை சொற்களால் வருணிக்க முடியாத ஒரு பேரின்பம் கொள்ளை கொள்ளுவது

போல் தோன்றுகிறது. இவருடைய அபய ஹஸ்தம் துன்பக்கடலிலே சுழன்று தவிக்கும் பக்தர்களுக்கு தைரியத்தையும், மனதிற்கு நம்பிக்கையும் தருகிறது.

இந்த ஆலயத்திலுள்ள தாயாரின் பெயர் கோமளவல்லி. இத்தாயாரின் வேண்டுகோளுக்கு இணங்க பெருமான் வைதீக விமானத்தில் மகா சங்கராந்தி நாளன்று இங்கு எழுந்தருளி தாயாரை மணம் செய்து கொண்டு ஸ்ரீ ஹேமரிஷியின் (தாயாரை இந் நகரில் உள்ள பொற்றாமரைத் தடாகத்தில் தங்கத்தாமரையில் மிதந்து வரும் போது கண்டெடுத்து வளர்த்து வந்தவர்) வேண்டுகோளையும் பூர்த்தி செய்தார். தாயாரின் சன்னதி பெருமாளின் சன்னதிக்கு அருகிலேயே இருக்கிறது. பெருமாளைத் தரிசிக்க செல்லும் முன் ஒவ்வொரு பக்தரும் தாயாரை முதலில் தரிசித்துவிட்டு செல்லும் நிலை ஒரு முறையாக இவ்வாலயத்தில் பின்பற்றப்படுகிறது.

இவ்வாலயத்தில் உள்ள ராஜகோபுரம் சுற்றுலா பயணிகளையும், கலையில் ஈடுபாடு உள்ளவர்களையும் ஈர்க்கும் சக்தியைப் பெற்றிருப்பதோடு தென்னகத்திலே உள்ள பெரிய ராஜ கோபுரங்களில் இதுவும் ஒன்றாக சிறந்துவிளங்குகிறது. மேலும் இவ்வாலயத்தில் பல கலை வண்ணங்களால் ஆன ஒரு மராட்சச தேர் ஒன்று இருக்கிறது. இதனைச் சித்திரைத் தேர் என்று அழைக்கிறார்கள். தல வரலாறு மூலம் இச்சித்திரைத் தேர் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு திருமங்கையாழ்வாரால் கொடுக்கப்பட்டது என அறியலாம்.

வடக்கே 12 வருடத்திற்கு ஒரு முறை வரும் கும்பமேளா பெருவிழாவைப்போல் இந்நகரிலும் (கும்பகோணம்) மகாமக பெருவிழா வருகிறது. அப்பெருவிழா நாளில் இந் நகரில் உள்ள பொற்றாமரைத் தடாகத்தில் நீராடுவது மிகவும் புண்ணியமாகக் கருதப்படும். மேலும் இவ்விழா நாளன்று 9 புனித நதிப் பெண்கள் (கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, கிருஷ்ணா, நர்மதை, காவேரி, சிந்து, சரயு) வந்து இத்தடாகங்களில் நீராடுகிறார்கள்.

கீழே விவரிக்கப்பட்டுள்ளப் புராணக் கதைகளிலிருந்தும் வரலாற்று நிகழ்ச்சிகளிலிருந்தும் இவ்வாலயத்தில் வீற்றிருக்கும் பெருமான் பக்தர்களின் நெஞ்சில் நீங்கா இடம்பெற்றிருந்தார் என்பதைத் தெரிந்துகொள்ளலாம்:

சாரங்க ராஜனே திருப்பதி வெங்கடாஜலபதியாவும், ஸ்ரீரங்கம் ரங்கநாத பெருமாளாகவும் இருக்கிறார்.

இஷ்வாகு வம்ச மன்னர்களால் வணங்கப்பட்டுவந்த வைதீக விமானத்தை ராமன் தன்னுடைய பட்டாபிஷேகம் முடிந்த பிறகு விபீஷணனுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தான். விமானம் ஸ்ரீரங்கம் என்னும் இடத்தில் நின்று விட்டது. விபீஷணனால் சிறிது கூட நகர்த்த முடியவில்லை. அப்பொழுது ரங்கநாத பெருமான் அவன் முன் தோன்றி 'நான் ஒரு உருவமாக ஸ்ரீரங்கத்திலும், மற்றொரு உருவமாக (ஹேம ரிஷியின் வேண்டுகோளின்படி) கும்பகோணத்திலும் இருப்பதாகத் தீர்மானித்துள்ளேன். ஆகவே நீ வருடத்திற்கு ஒரு முறை ஸ்ரீரங்கம் வந்து தரிசிப்பாயாக' என்று கூறினார்.

இந்த இடைக் காலத்தில் பிருகு முனிவர் என்பவர் மகாவிஷ்ணு தன்னை அலட்சியப்படுத்தியதால் கோபமடைந்து அவருடைய மார்பில் உதைத்து விட்டார். ஆனால் விஷ்ணுவோ கோபம் அடையாமல் ரிஷியின் கால்களை தொட்டு வணங்கினார். இந்த நிகழ்ச்சியை கண்ட லக்ஷ்மி கோபம் அடைந்து வைகுண்டத்தை விட்டு பூலோகம் சென்று தங்கினாள். விஷ்ணு லக்ஷ்மியைத் தேடிக் கொண்டு பூலோகம் வந்து அங்கு ஸ்ரீ பத்மாவதி என்ற பெண்ணை மணந்து ஸ்ரீநிவாசராக திருப்பதியில் இருந்தார். இதை அறிந்த லக்ஷ்மி மறுபடியும் கோபம் அடைந்து பெருமானைக் கடிந்துகொள்வதற்காகத் திருப்பதி வந்தாள். பெருமான் லக்ஷ்மிக்கு பயந்து நாரதர் புத்திமதிப்படி குடந்தை சென்று ஒரு பொந்தில் பதுங்கிக் கொண்டார். லக்ஷ்மி பெருமானைத்தேடி இங்கு வந்து ஒரு செழிமையான பகுதியை கண்டு, தன் கோபத்தை மறந்து, பெருமானோடு இணைய விரும்பி பால கோமளவல்லியாக பொற்றாமரைதடாகத்தில்தங்கத் தாமரைப்பூவில் அவதாரமெடுத்தாள். பிருகு முனிவர் ஹேம ரிஷியாக அவதாரமெடுத்து தான் விஷ்ணுவிடத்தில் அவமரிதையாக நடந்து கொண்டதை நினைத்துவருந்தி இதற்குப் பரிகாரமாக பாலகோமளவல்லியை தன் மகளாக எடுத்து வளர்த்து அவள் சார்பாக பெருமானிடத்தில் வேண்டி அவளை பெருமானுடன் சேர்த்து வைத்தார்.

## நாலாயிர திவ்யப் பிரபந்தம் புத்துணர்ச்சி

இன்றைக்கு 1200 ஆண்டுகளுக்கு முன்பு நாலாயிர திவ்யப் பிரபந்தப் பாடல்கள் மக்களின் நினைவாற்றல்

கெங்கல் ஆஞ்சநேய சுவாமி,
(சென்னப்பட்டண அருகில்.)
திரு. ஆர். வி. ரெட்டி—சென்னபட்டண.



எல்லையிலிருந்து நழுவி பட்டுப்போகும் தருவாயில் இருந்த பொழுது அதற்கு புத்துயிர் ஊட்டி திரும்ப மலரச் செய்த பெருமை நாதமுனிகளையே சாரும்.

இவர் ஒரு சமயம் பெருமானைத் தரிசிக்க இந்த ஆலயத்திற்கு வந்த பொழுது தற்செயலாக நம்மாழ்வாரின் 10 பாசுரங்களைக் கேட்க நேர்ந்தது. பொருள் சுவை நிறைந்த தேனினும் இனிய அந்தப் பாசுரங்கள் அவரை வியப்படையச் செய்தன. விஷ்ணு சகஸ்ர நாமத்தில் வரும் ஆயிரம் பெயர்களில் ஒரு பெயர் கூட பேரன்பு பிரவாகமாய் உள்ள 'ஆராமுதே' என்ற பெயருக்கு ஈடாகாது என்று தீர்மானித்து நம்மாழ்வார் பாடிய மற்ற பாசுரங்களைத் தேடிக் கண்டு பிடிப்பதில் முனைப்பாக இருந்து, நம்மாழ்வார் ஆசிகளுடன் வெற்றியும் பெற்றார். பகவானே ஆழ்வாராக அவதரித்து தான் விருப்பமுடன் சேகரித்து வைத்த 10 பாசுரங்களின் மூலம் மக்களின் எண்ணத் திரையில் மங்கி இருந்த நாலாயிர திவ்யப் பிரபந்தங்களைப் பிரகாசிக்கச் செய்தார் என்று சொல்லலாம். இதனால் இவருக்கு ஆராமுத ஆழ்வார் என்ற பெயரும் உண்டு.

மாதங்களில் நான் மார்கழியாக இருக்கிறேன் என்று பகவான் கீதையில் சொன்னபடி மார்கழிமாதம் முழுவதும் இவ்வாலயத்தில் உற்சவங்கள் விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. முதல் 10 நாட்கள் பகல் பத்து எனவும், அடுத்த 10 நாட்கள் இரா பத்து எனவும், கடைசி10 நாட்கள் பிரம்மோற்சவமாகவும் கொண்டாடப்படுகிறது. இந்த உற்சவ நாட்களை முறைப்படுத்தியவரே ஸ்ரீ நாதமுனிகள்தான் என்பது தலவரலாறு மூலம் தெரிகிறது. பரமபதாநத சேர்வையில் பகவான் தன்னுடைய துணைவியார்களான கோமளவல்லி, ஸ்ரீதேவி, பூதேவியுடன் சேஷ வாகனத்தில் புன்னகைத் ததும்பும் இதழ்களுடன் காட்சி தருவதையும், பக்தர்கள் பிரபந்தங்களிலிருந்து பாசுரங்களை ஓதும் காட்சியையும் காணும்போது நம்மை நாமே மறந்துவிடுவோம்.

பெருமாளின் கருவறைக்குச் செல்வதற்கு இரண்டு வழிகள் உள்ளன. வடக்கில் உள்ள வாசலுக்கு உத்தராயண வாசல் என்றும், தெற்கில் உள்ள வாசலுக்குத் தட்சணாயண வாசல் என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. உத்தராயண வாசல் 6 மாதங்களும், தட்சணாயண வாசல் 6 மாதங்களும் திறந்திருக்கும். கருவறையில் பெருமானின் முக்யமான 12 பெயர்களை நினைவுபடுத்துவதுபோல் 12 கருங்கற் தூண்கள் திருமாமணி மண்டபத்தைத் தாங்கி நிற்கிறது. இந்த மண்டபத்தின் கருவறையின் வடக்குப் பக்கத்தில் உள்ள தூண்களில் சிங்கத்தின் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது. இந்த மண்டபம் 7-ம் நூற்றாண்டு காலத்தில் பல்லவ மன்னனான மகேந்திரவர்மனால் கட்டப்பட்டது என்று தெரியவருகிறது. தாயார் கோமளவல்லிக்கு நடக்கும் உற்சவங்கள் எல்லாம் ஆலயத்திற்குள்ளேயே நடக்கிறது. ஆலயத்தின் வட பகுதியில் உள்ள பிராகாரத்திற்குத் தூணிலா முற்றம் என்று பெரியாழ்வாரால் அழைக்கப்பட்டதை நாமும் மனதில் இருத்தி வைத்துக் கொண்டிருக்கிறோம்.

மெய்க்காவல் உடையார் என்பவரால் இந்த ஆலயம் விழு மண்ணிலிருந்து பாதுகாக்கப்பட்டதால் அவருக்காக ஒரு சிலை வைக்கப்பட்டுள்ளது. பிரம்மோற்சவத்தன்று பெருமான் இரதத்திலிருந்து இறங்கி தன்னுடைய துணைவியார்களுடன் மெய்க்காவல் உடையாரிடம் வந்து அவரை கௌரவிக்கும் காட்சி—ஒரு காவலன் தன்னுடைய கடமையிலிருந்து வழுவாமல் தன் பணியை எவ்வாறு செய்தான் என்பதை—நம் மனத்தில் பசுமையாக பதியச் செய்கிறது.

சந்தனக்காப்புடன் ஸ்ரீ ஆதிகேசவ மூர்த்தியும், ஸ்ரீ வைகானஸாசார்யாரும்.
திரு. ஏ. கே. ராமானுஜம்—திருப்பதி.



(செப்டம்பர் மாத இதழ் தொடர்ச்சி)

# திருவேங்கடவன் திருவருள் தேவி

திருமலையப்பனின் கருணைவடிவான தயா தேவியே! நீ அவ்வப்பனின் திரு உள்ளத்தை நன்றாய் அறிந்து அதனை ஒட்டியே மக்களை காப்பாற்றுகின்றாய். பல பாவங்களையும் புண்ணியம்போல் செய்துவிட்டுத் திருவேங்கடவன் முன் வந்து வழிபடுகின்றான்! இறைவனுக்கு அவன்பால் மிக்க வெறுப்பும் கோபமுமே தோன்றுகின்றது. ''செய்யத் தகாதனவெல்லாம் செய்துவிட்டு என்னைச் சேவிக்க வருகிறான்'' என்று அவன் முகத்தைச் சுளிக்கின்றான். ஏன்?

அப்பொழுது நீ அவன் உள்ளத்தினின்று மறைந்துவிடுகிறாய். ஆனால் உன் குழந்தைகளாகிய மக்களை நீ விட்டுவிடமாட்டாய்! எப்படியோ அப்பாபியின் உள்ளத்தில் புகுந்து ஏதாவதொரு புண்ணிய காரியத்தைச் செய்யும்படி தூண்டிவிடுகின்றாய்.

நூற்றுக்கணக்கான ஏழை மக்களுக்கு அன்னமிட்டு உடை வழங்குவது போன்ற ஏதேனுமொரு நல்ல பணியைச் செய்துவிடுகிறான். மறுபடியும் திருமலைக்கு வருகின்றான்.

இறைவன் மனம் அவன் அடிப்படையான பழைய பாபங்களை மறப்பதில்லை. அவன் உள்ளத்தில் சிறிது சினம் ஏற்படுகின்றது.

ஆனால் இம்முறை நீ அவன் உள்ளத்தை விட்டுவிடுவதில்லை. ''இந்த பக்தன் நூற்றுக்கணக்கான ஏழைகளுக்கு அன்னமிட்டான்'' என்ற அவன் உள்ளத்தில் முணுமுணுக்கின்றாய். அவன் உள்ளம் சிறிது குளிர்கின்றது! அந்த பக்தனுக்கு ''இனி பாப காரியங்களிலீடுபடாதே. நல்லோர் நட்பும் பெரியோர் உபதேசங்களும் கிட்டட்டும்'' என்று ஆசீர்வதிப்பதேபோல் மந்தஹாஸம் செய்கின்றான்.

இக்காட்சியில் ஆழ்வார் பேசிய சொற்களே ஒலிக்கின்றன!

''சூதனாய்க் கள்வனாகித் தூர்த்த
ரோடிசைந்து நாளும்
மாதரால் கயல்களென்னும்
வலையில் பட்டழுந்துமென்னைப்
''போதரே' என்று சொல்லி''க்
காப்பாற்றுகின்றான் எம்பிரான்.

இவ்விடத்தில் இத்தயா தேவியின் அன்புப் பெருக்குக்கு ஓர் உதாரணத்தை உருவாக்குகின்றது இக் கவியினுள்ளம்.

'ஸரஸ்வதி' எனும் தெளிந்த ஆறு போல் (ஸரஸ்வதீ இவ) சில இடங்களில் தோன்றுவதும் சில இடங்களில் மறைந்தும் அந்தர்வாஹினியாகவும் (க்வசிதுபலக்ஷிதா க்வசித் அபங்குர கூட கதி:) நீக்க முடியாத பாபங்களை (அப்ரதிகம் அகம்) விரைவில் நீக்குகின்றாய் (ஸமதி சமயதி) என்று உவமித்து மகிழ்விக்கும் இந்த ஸ்லோகத்தைப் படியுங்கள். ஸரஸ்வதி ஓர் புண்ய நதியாகிய தேவி. மிகத் தெளிவான நீரோட்டம். அந்நீரோட்டம் சில இடங்களில் புலப்பட்டு ஓடியும் சில இடங்களில் நீரூற்றாய் பூமிக்குள் மறைந்து, தோண்ட வெளிப்பட்டும் உவகை ஊட்டுவிக்கின்றது.

இந்நதியில் நீர் சில இடங்களில் சிரமப்பட்டுத் தோண்டிப் பெறுவது போல் சில எதிர்பாராது செய்யும் புண்ணிய கர்மாக்களாலும் ப்ராயச்சித்தங்களாலும் அவன் பாபங்களையொழித்துவிடுகிறான்.

''அபிமுக பாவ ஸம்பதபிஸம்பவி
நாம் பவிநாம்
க்வசிதுபலக்ஷிதா க்வசிதபங்குர
கூட கதிঃ
விமல ரஸாவஹா வ்ருஷகிரீ சதயே
பவதீ
ஸபதி ஸரஸ்வதீவ சமயத்யகமப்ர
திகம் (52)

இப்படி ஸரஸ்வதியின் ப்ரவாஹத்திற்கு வேங்கடவன் அருள் தேவியை உவமித்த கவி, கங்கையைவிடுவாரா? அடுத்த இரு ஸ்லோகங்களிலும் இத் தயா தேவியின் ப்ரபாவத்தை அப்புனித கங்கையோடு உவமித்து மகிழ்கின்றார். ஒன்று காண்போம்.

---

திரு. எஸ். வி. ராமஸ்வாமி,
செகந்திராபாத்.

---

தேவகங்கைபோன்ற தயாதேவியே! கங்கையை வேதங்கள் போற்றுவது போல் உன்னையும்தான் போற்றுகின்றது (நிகமஸமாச்ரிதா) அது தன் வெள்ளத்தால் உலகின் குறைகளையெல்லாம் நீக்குகின்றது. ஸ்ரீனிவாஸன் திருவுள்ளத்திலிருந்து பொங்கி எழும் நீயும் அவனையண்டும் மக்கள் குறைகளையெல்லாம் நீக்குகின்றாய். (நிகில லோக ஸம்ருத்தி கரீ) கங்கை இரு கரைகளையும் தகர்த்துப் புரண்டோடுகின்றது. நீயும்தான் மக்கள் பிறவிக்குக் காரணமான பாப புண்ணியங்களை உடைத்தெறிந்து அவர்களுக்கு மோக்ஷபர்யந்தமான அநுக்ரஹங்களைச் செய்கின்றாய். (பஜதக கூல முத்ருஜ கதீ) அது தன்னுள் மூழ்குபவர்களின் தாபத்ரயங்களைப் போக்குவதுபோல் நீயும்தான் உன்னை நினைப்பவர்களுக்குச் சாந்தியளிக்கின்றாய் (பரிதப்த ஹிதா) கங்கையின்

(31-ம் பக்கம் பார்க்க)

# ஆழ்வார்கள் அநுபவித்த வேங்கடம்

கலியுகத்தில் மக்களின் தெய்வ வழிபாட்டுக்காக ஸர்வேச்வரன் தனது பரந்த கருணை விலாஸத்தாலே திவ்ய மங்களத்திருமேனி கொண்டு நம் நாட் உள்ள பல திவ்ய தேசக்கோயில்களில் அர்ச்சாவதாரமாக எழுந்தருளி இருக்கின்றார். அப்படிப்பட்ட அர்ச்சாவதாரத்தின் முக்கியத்துவத்தை ஆழ்வார்கள் தங்கள் அநுபவத்தால் அருளிச் செய்த நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் வாயிலாக நம் நாட்டிற்கு அருளினார்கள். அவர்கள் அநுபவித்துப் பாடிய 108 திவ்ய தேசங்களில் தலைசிறந்தவை திருவரங்கம், திருமலை காஞ்சி என்பனவாகும். இவற்றில் இரண்டாவது திருப்பதியான வேங்கடமலையை, அதாவது பாபங்களையெல்லாம் போக்கக்கடவதான திருமலையை ஒன்பது ஆழ்வார்கள் அநுபவித்துப் பாடிப் புகழ்கின்றார்கள். அவர்கள் பின்வருமாறு: பொய்கையாழ்வாழ்வார். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார், குலசேகரப்பெருமாள், பெரியாழ்வார் திருப்பாணாழ்வார். திருமங்கை ஆழ்வார். இவர்களில் நம்மாழ்வாரைத் தவிர மற்ற ஆழ்வார்கள் திருமலைமேல் பாதம் வைத்து ஏறிச் செல்லாமல் மலையையே கண்டு அநுபவித்ததாகவும், நம்மாழ்வார் தனது அவதார இடத்திலிருந்து உட்கண்ணால் திருமலையை அநுபவித்ததாகவும் நம்புவர். மேலும் எம்பெருமானைக் காட்டிலும் எம்பெருமானோடு ஸம்பந்தம் பெற்ற பொருள்களே பரம உசிதம் என்று எண்ணி, திருவேங்கடமுடையான் ஸந்நிதி வரையில் போகாமல், அவனுடைய ஸம்பந்தம் பெற்றதான திருமலையையும், அங்கு உள்ள உயிரினங்கள், இயற்கை எழில் முதலியவைகளையும் ஆழ்வார்கள் ஈண்டு அநுபவித்துள்ளனர்.

தினந்தோறும் பலபல திசைகளினின்றும் வைதிகர்கள் வந்து தூப தீபம் கொண்டு விரும்பப் பெற்றதும், அவரவர்கள் வேண்டுகின்றதும், எம்பெருமான் நித்ய சூரிகளான தேவர்கள் வந்து எழுந்தருளியிருக்கும் இடமே திருமலை என்று முதல் திருவந்தாதியில் பொய்கையாழ்வார் அருளிச்செய்கிறார். மேலும், உயிரினங்களை வருணிக்கும்போது அதாவது குறவர்கள் யானைகளைப் புனங்களில் இருந்து துரத்த பெரிய மாணிக்கக் கட்டியை வீசும்போது, அதனால் ஏற்பட்ட மின்னலின் ஒளி போன்ற பிரகாசத்தைக் கண்டு பாம்புகள் புற்றுக்களுள் நுழையும். அப்படிப்பட்ட புற்றுக்களையுடையது திருமலை என்கின்றார். பெண்கள் துவாதசியன்று வாடாத மலர்களைத் தொடுத்து மாலைகட்டி ஆகாசத்தில் உள்ள நக்ஷத்திரத்தின் ஒளிமங்கும் படி தீபம் ஏந்தி நிற்கவும், எம்பெருமான் பல அவதாரங்களில் எடுத்த பெருமையெல்லாம் பொலிய நின்ற இடமாகவும் திகழ்கின்றது திருமலை.

பூதத்தாழ்வார் தனது இரண்டாம் திருவந்தாதியில் திருமலையின் இயற்கை எழிலைக் கீழ்க்கண்டவாறு வருணிக்கிறார். மூங்கில் ஓங்கி வளர்ந்து ஆகாயத்தை முட்டும் படியாகவும், குளிர்ந்த சாரலையுடையதாகவும், யோக நிலையில் உள்ள முனிவர்களின் கூந்தல் கற்றையை சிறுமலைகள் என்று எண்ணி, பூங்கொடிகள் அதன்மேல் படரும் இடமாகவும் நிகழ்கிறது திருமலை. மேலும் உயிரினங்கள் விளையாட்டை அநுபவிக்கும் போது, திருமலையில் வானரங்கள் விடியற்காலையில் எழுந்து பூத்த சுனைகளிலே குளித்து அங்கேயிருக்கும் செவ்வி மலர்களைப் பறித்துத் துதிசெய்யும் பணியைக் குறிப்பிடுகிறார் இவ்வாழ்வார். யானையானது தன் பேடைக்கு மூங்கில் குருத்தைத் தேனிலே தோய்த்து அப்பேடை வாயிலே பிழிகின்ற காட்சிதான் என்னே!

பேயாழ்வார் தனது மூன்றாம் திருவந்தாதியில் திருமலையின் தோற்றத்தை அனுபவிக்கும் முறை நமது கண்கள் முன் நிறுத்தப்பட்டதாக இருக்கும். மேகங்கள் எல்லாம் ஒரு மூலையில் ஒதுங்கும் படியாகவும், சந்திர மண்டலத்தளவும் ஓங்கியிருக்கும் சிகரங்களும், நாற்புறமும் திரள்திரளாக அருவிகள் பெருகும் ஓசையும், வெட்டப்பெற்ற மூங்கில்கள் மீண்டும் ஆகாயத்தை முட்டும் அளவும் ஓங்கியும் இருக்கும் காட்சிக்கு இடம் திருமலை.

---

**திரு. எம். வரதராஜன், திருப்பதி.**

---

இப்படிப்பட்ட இயற்கை எழிலை உடைய திருமலையைச் சித்தரித்த இவ்வாழ்வார், நமக்கு வானரங்களின் விளையாட்டின் அழகை விவரிக்கிறார். அதாவது, ஒரு சுனையின் கரையில் கவிழ்ந்து பார்த்த ஆண் குரங்கு நீரில் உள்ள தன் பிரதிபிம்பத்தைப்பார்த்து, வேறொரு ஆண்குரங்கு என்று எண்ணி, அது களாப்பழம் பறிப்பதாகவும் பிரமித்து, ''எனக்குக் களாப்பழம் தா'' என்று கை நீட்டுவதாகக் குறிப்பிடுகிறார். அப்படிப்பட்ட காட்சிக்கு இடமான திருமலையின் சிறப்புதான் என்னே! மேலும், ஆகாசத்தில் திரிகின்ற சந்திரன் தனது கீழ்வயிறு தேயும்படியாக சிகர நுனியில் ஸம்பந்தப்பட்டுக் கொண்டுச் செல்கின்றானும். அப்போது அவனது மடியில் இருக்கின்ற முயலினை, திருமலைமீது திரிகின்ற வேங்கைப் புலி கண்டு அதனைத் தன் உணவாகக் கொள்ள பிடிக்க மாட்டாமல் வருந்துமாம். அப்படிப்பட்ட சிறப்புடையது திருமலை.

திருமழிசையாழ்வார் நான்காம் திருவந்தாதியில் நித்ய சூரிகளின் இந்நிலத்தில் உள்ள ஸம்ஸாரிகளின் பாபங்களையும், உடம்பைப்பற்றின நோய்களையும் போக்கவும், கால் பெயர்ந்து வெளியில் போக வொட்டாமல் அவ்விடத்திலேயே அன்பர் உள்ளத்தில் குடிகொள்ளவும் வேங்கட வன் நித்யாவாசம் பண்ணும் [illegible]

# 25°/° தள்ளுபடியில்

# சித்த மருத்துவ நூல்கள்



சித்தர் குறுநூல்:- எல்லா நோய்களுக்கும் எளிய முறையில், நினைத்தவேளையில் செய்யும் அனுபவ மருந்துகள் அடங்கிய சிறந்த மருத்துவ நூல். (விலை ரூ. 6-00)

மாதர் மருத்துவம் :- மாதர் நலத்தால் மக்களினம் வாழையடி வாழையாக வாழ்கின்றது. பெண்களின் உடல் நிலையில் உள்ள கேடுகள். அவற்றைப் போக்கும் அரிய முறைகள், அனுபவ மருத்துவ சிறப்புகள் போன்றவைகள் நிறைந்தது. பெண்ணினம் கண்ணேனை காத்திடும் அரிய ஏடு. (விலை ரூ. 6-00)

மரண கண்டி :- மர ம் யாவருக்கும் பொதுவுடமை. வாத, பித்த, சிலேற்பன பேதத்தால் வந்தடையும் உடல் நலமின்மையை சீரிய முறையில் கூறுகின்றது. (விலை ரூ. 1-00)

உடலுறுப்பு விளக்கம்:- தம்முடலைப்பற்றி யார்தான் அறியவிரும்புவதில்லை? உடலுறுப்புகளின் விளக்கம், பிரிவு, ஒன்றோடு ஒன்றின் இணைப்பு, தொழில் இவைகளை தெள்ளிய முறையில் பட விளக்கமுடன் சித்தரிக்கிறது. (விலை ரூ. 7-00)

விக்கல் நோயும் மருந்தும் :- விக்கல் ஒரு நோயா? என்று கேட்பார் சிலர். விக்கலின் பிரிவுகள், அதன் குணங்கள், உட்கொள்ளும் மருந்துகளை வலியுறுத்தும் சிறந்தநூல். (விலை ரூ. 1-00)

படுவர்ம திரட்டு :- உடலில் நிலைத்துள்ள தத்துவ உயிர்நிலைக்காலங்களில் அடி, தட்டு, அல்லது வெட்டுப்பட்டால் ஏற்படும் சிரமத்தை மாற்றும் மருத்துவம் ''வர்மாணி''. முக்கியமான வர்மங்கள், படுவர்மம். இவ்விடங்கள் தாக்குண்டால் ஏற்படும் சிரமங்களும், இளக்கு முறைகளும், மருத்துவ பாகங்களும் அடங்கிய சிறந்த ஏடு. (விலை ரூ. 5-00)

கடிவிஷ மருத்துவம் :- மனிதரை கடித்து இன்னல் படுத்தும், எண்ணிறைந்த கடிவிஷங்களின் தன்மை, மருந்து வகைகள், மற்றும் பல விபரங்கள் அடங்கியது. யாவரும் படித்து, வைத்துக் கொள்ளுதல் நலம். வீட்டில் மருத்துவர் இருத்தலுக்கு ஒப்பானது. (விலை ரூ. 2-00)

தொடுவர்ம திரட்டு :- தொடுவர்மங்களின் இடங்கள், அடியிடிபடுவதால் ஏற்படும் விபரீதங்கள், இளக்கு முறைகள் இன்னும் மருந்துவகை போன்றவைகளை கருத்தோடு அறிவுறுத்தும் கருவூலம். (விலை ரூ. 5-00)

அகல மரண நூல் :- எண்ணற்ற மர்மச் சாவின் காரணபூர்வத்தை, மருத்துவ அறிவால் சிறக்கக் கூறும் அரிய ஏடு. யாவரும் கற்றல் உத்தமம், கொஞ்சம் பிரதிகளே உள. முந்துங்கள். (விலை ரூ. 6-00)

ஐம்பொறி விளக்கம் :- மெய், வாய், கண், மூக்கு, செவி இவைகளின் நிலையங்கள், காக்கும் விதிகள், போன்றவற்றை அருள்மிக்க, பொருள் சிறக்க சித்தரிக்கும் ஏடு. (விலை ரூ. 1-00)

நீர்ப்பாய்ச்சல் நோயும் மருந்தும் :- நீர்ப்பாய்ச்சல் நோய்கள்தான் எத்தனை? வாய், கண், மூக்கு, செவி இவற்றின் அமைப்பு, அவற்றிலிருந்து நீர்ப்பாய்ச்சல்நோய்கள் ஏன் உற்பத்தியாகிறது? அதற்கு மருத்துவ பரிகாரங்களைப் பகர்கின்றது. (விலை ரூ. 2-00)

கொங்கையின் இரகசியம் :- பெண்களின் குணங்கள் அவரவர் மார்பகங்களின் தன்மையை பொறுத்தது. இந்த ரகசியத்தின் ரகத்தை இந்நூல் சால விளக்குகிறது. இது மங்கையின் பண்பை விளக்கும் ஒரு காவியம். (விலை ரூ. 4-00)

வர்மசூட்சம :- முக்கிய வர்மங்கள், வர்மப்பாதிப்புகள், சுளுக்குமுறைகள், வர்மபரிகாரங்கள் போன்றவைகளை விளக்குகிறது. (விலை ரூ. 5-00)

மதுவும் மானிட உடலும் :- மதுவினால் ஏற்படும் கேடுகளை உடல் தத்துவப்படி, விஞ்ஞான விவரப்படி அச்சுறுத்துகிறது. (விலை ரூ. 3-00)

வர்மாணி கைமுறை ஏடு :- வர்மமுற்றோரை, இளக்கு முறைப்படி சாதாரணமாக சிகிச்சைச் செய்வது பழக்கம். இந்நூல் மருந்து பிரயோகத்தால், நலனை தேட வழிப் பிறப்பிக்கிறது. மறைமுகமாக வைத்து கையாண்ட இந்நூல், அரிய முறைகளை தாங்கியுள்ளது. அபூர்வமான ஏடு. (விலை ரூ. 1-50)

திரிகடுகின் சிறப்பு :- சுக்கு, மிளகு, திப்பிலி, இவைகளை திரிகடுகு என்பர். இதன் மருத்துவ நயங்களை மிக விரிவுடன் கூறும் நூல். மருத்துவர்களுக்கு இன்றியமையாத அனுபவ நூலாகும். (விலை ரூ. 2-00)

குறிப்பு : (1) புத்தகங்களின் விலையை M.O. செய்க. தபால் செலவு இனம். வி. பி. பி. கிடையாது.

(2) முன்பணம் கட்டும் ஏஜண்டுகள் எல்லா ஊர்களுக்கும் தேவை. விஷேச சலுகை உண்டு. விண்ணப்பிக்க.

**சித்த மதுட பிரசுரம், 3382, அண்ணநகர்**

**சென்னை - 600 040.**

திருமலையேஎன்றுரைக்கிறார். இப்படிப் பட்ட திருமலைக்கு இளமை கெடுவதன் முன், அதாவது முதியவயதுவரும்முன், போய் வழிபடும்படி இவ்வாழ்வார் அருளிச் செய்கிறார். இத்திருமலை யாளிகள், வலிமைமிக்க சிங்கங்கள், மான்கள், குரங்குகள், மாணிக்கங்கள், முத்துக்கள், பலவகைப்பட்ட பூ மரங்கள், நவரத்தினங்கள் அருவிகளோடு கலந்து உருண்டு விழப்பெற்றக் காடுகள் மற்றும் வேடர்கள் வாழும் இடமாகவும் உள்ளது. மேலும் இத்திருமலையில் ஒரு யானை ஆகாயத்தில் அழகிய விளக்கு போல் இருக்கும் சந்திரனைப் பிடித்து பெருமாள் சந்நிதியில் நந்தா விளக்காக வைக்க வேண்டும் என்று எண்ணி நீட்டின துதிக்கை நீட்டிய படியே இருக்க, வேடர்கள் அப்போது அதனை வளைத்துப் பிடிக்கும் காட்சி காண கண் கொள்ளாது.

திருவாய்மொழியில் நம்மாழ்வார் திருமலையின் இயற்கை எழிலைக் கீழ்க் கண்டவாறு எடுத்துரைக்கிறார். கம்பீரமான ஓசையையுடைய அருவிகள் பொருந்தியதும், அந்த அருவிகள் மணிகளையும், பொன்களையும், முத்துக்களையும் சேர்க்கும் இடமாகவும், சேறு நிரம்பிய சுனைகளிலே செந்தாமரை மலர்கள் சிவந்த தீபபோன்று நிறத்தை உடையதாகக் கொண்டு மலரும் இடமாகவும், உலகுக்கெல்லாம் திலகமாகவும் திகழ்கின்றது திருமலையின் தோற்றம். அப்படிப்பட்ட திருமலையில்தான் சிறந்த புஷ்பங்களையும் தீர்த்தத்தையும், தீப தூபத்தையும் ஏற்றிக்கொண்டு நித்யசூரிகள் தங்கள் தலைவரான சேனை முதலியாரோடு திரளாக வந்து, முன்பு ஒரு காலத்தில் உலகங்களை அளந்த பிரபுவும், கோவர்த்தன மலையைக் குடையாக தாங்கினவனும், நமது வினையைத் தீர்ப்பவனுமான எம்பெருமானைத் துதி செய்கிறார்கள். கயற்கண்ணிகளான தங்கள் மனைவிமார்களுடன் கூடிவந்து விரும்பிப் பணியும் இடம் திருமலையே.

குலசேகரப் பெருமாளோ மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும், எம்பெருமான் ஸம்பந்தமுள்ள அந்தத் திருமலையின் மேல் ஆர்வம்கொண்டு ஏதேனும் ஒரு பிறவியெடுக்க விரும்புகிறார். திருமலையில் உள்ள கோனேரியில் குருகாய்ப் பிறக்கவோ, பூஞ்சோலைகள் சூழ்ந்த சுனையில் மீனாய்ப் பிறக்கவோ வண்டு ரீங்காரம் பாடும் மலையில் செண்பகமரமாய் நிற்கவோ, இலை, காய், கனி, நிழல் ஒன்றுக்கும் உதவாத மரமாய்ப் பிறக்கவோ, ஒரு பாறையாகவோ, கானாறாய்ப் பெருகவோ, நடைபாதையாகவோ, அல்லது திருமலையப்பனுடைய திருவருள் படும்படி அவனது கண்முகப்பே திருமலையப்பனை சேவிக்கவரும் பாகவதர்கள், தேவர்கள் பாதம் படும் படியாக உள்ள படியாக இருந்து பவளவாயின் அழகைக் காண விரும்புகிறார் குலசேகரப் பெருமாள். மேலும் இவற்றில் ஒவ்வொரு பிறவியிலும் குறைகாணவே கடைசியாக பொன் மயமான மலையின் மேல் ஏதேனும் ஒரு பிறவியெடுத்து அனுபவிக்க விரும்புகிறார்.

எம்பெருமானுக்குப் 'பல்லாண்டு' பாடிய பெரியாழ்வார் தனது திருமொழியில் திருமலையின் உச்சியானது ஆகாசத்தளவும் உயர்ந்தும், குளிர்ச்சி பொருந்தியதுமாகவும் உள்ளது என்று அனுபவிக்கிறார்.

'அமலனாதிபிரான்' தந்து அருளின திருப்பாண் ஆழ்வாரோ, அரங்கனைப் பாடும்போது, இறைவனே நித்யசூரிகளுக்காக, குரங்குகள் வாழப்பெற்ற வடதிசையில் உள்ள திருமலையில் ஆராதிக்கும்படியாக நிற்கின்றான் என்று குறிப்பிடுகிறார்.

திருமங்கை மன்னன் திருமலையைச் சித்திரிக்கும் படியான அவருடைய பாக்களை அநுபவிக்கும்போது, நமது கண்கள் முன்னே திருமலையினையே உருவாக்கி அநுபவிக்கச் செய்கிறார். அவர் அநுபவித்ததை ஈண்டு காண்போம்.

திருமலையானது நீர்வளம் உடைய சிவந்த மீன்கள் களித்து வாழப்பெற்ற

ஸ்ரீராமர், லக்ஷ்மணர், சீதை-திருமலை வசந்தோற்சவத்தின்போது.



# தங்கு வசதி விவரங்கள்

| காட்டேஜ் விவரங்கள் | கிடைக்கும் காட்டேஜ்களின் எண்ணிக்கை | நாள் ஒன்றிற்கு வசூலிக்கப்படும் வாடகை விவரங்கள் |
|---|---|---|
| **திருமலையில்** | | |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கஸ்ட் ஹவுஸ் | 30 | இரண்டு படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 16/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 20 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 20/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 30 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 15/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | | ஹீட்டர் ஒன்றுள்ள பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 9/-<br>ஹீட்டர் இல்லாத பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 7/- |
| வேங்கடாசல காட்டேஜஸ் | 16 | ,, |
| ஆழ்வார் நகர் காட்டேஜஸ் | 40 | ,, |
| வ்வேலி வ்யூ காட்டேஜஸ் | 9 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 16/- |
| நாராயணகிரி காட்டேஜஸ் | 12 | ,, |
| சங்கு மிட்டா காட்டேஜஸ் | 81 | இரண்டு கட்டில்களைக் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 10/-<br>பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 5/- |
| சேஷாத்திரிநகர் காட்டேஜஸ் | 68 | ஹீட்டர் ஒன்றினைக் கொண்ட முழு காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 12/- |
| அஞ்சநாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் ஒன்றுடன் கூடிய காட்டேஜின் 'ஏ' பகுதிக்கு ரூ. 7/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் இல்லாத காட்டேஜின் 'பி' பகுதிக்கு ரூ. 5/- |
| **திருப்பதியில்** | | |
| தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ் | 18 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொண்ட அறைகள்) | 30 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாசசத்திரம் (கீழ்ப் பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொண்டது) | 40 | நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 15/- |

**குறிப்பு :** மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

சுனைகளையுடையதாகவும், புண்ய தீர்த்தங்களையும் கொண்டு பெரிய ஆகாயத்தினின்று மழை நீரும்மிக்கப் பனித்துளியும் பெய்யப் பெற்றதும், மூங்கில்கள் நெருங்கியிருக்கப் பெற்றதும், அவைகள் பிளவுபட்டு ஒளிமிக்க வெண் முத்துக்களையும் இரத்தினங்களையும் உதிர்த்தும், கோல்களினின்று தேன் இழிந்து வெள்ளமாக ஓடவும் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்ததாயும் மேலே உலாவுகின்ற சந்திரசூரியர்கள் விலகிப் போகும்படி உயர்ந்து விளங்கும்சிகரங்களையுடையதாயும், பரிமளம் மிக்கதாயும் உள்ளது. இப்படிப்பட்ட இயற்கைக் காட்சியில், உயர்ந்த பரண்கள் தோறும் வஞ்சிக் கொம்போடு ஒத்த இடுப்புடைய நாணம் பொருந்திய பெண்கள் வயல்களைக் காவல் செய்து கொண்டு இருக்கின்றனர். கவரி மான்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து இருக்கின்றன. மேலும், யானைகளின் எண்ணிக்கை அதிகமாகவும், அழகிய சோலைகள் நடுவே அவைகள் கூட்டமாகவும் இருக்கின்றன.

இப்படிப்பட்ட நீர்வளமும், நிலவளமும், இயற்கை எழிலும் பொருந்திய அழகிய திருமலையில் தெளிந்த ஞானிகள், கிருதயுகத்தில் வெளுத்த நிறத்தனையும், துவாபரயுகத்தில் நீலமேகவண்ணனாகவும், கலியுகத்தில் கருத்தநிறத்தனையும் உள்ள திருவேங்கமுடையானைத் தியானித்துக் கொண்டு ஒவ்வொரு நாளும் வணங்குகின்றனர்.

இவ்வாறு ஆழ்வார்கள் அநுபவித்த வேங்கடமலையை ஒவ்வொருவரும் அவரவர்கள் இருக்கும் இடத்திலேயே நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் பிறகு நேரிலே திருமலைக்கு வரும்போது மலையப்பனின் திருமேனியைக் கண்களால் கண்டும், சேவித்தும், அநுபவித்தும் உய்யும் வகையை அறிவோமாக.



# எண் கணித சோதிடமும்....

# ....அதன் பலா பலன்களும்

(செப்டம்பர் மாத இதழ் தொடர்ச்சி)

பாகம்—9

## எண் ஆறின் தன்மைகளும் அதன் பலாபலன்களும்

ஆறும் எண்ணைத் தன்பால் கொண்டவர்கள் எல்லோரும் பொதுவாகவே வசீகரத்தோற்றம் உடையவர்களாக இருப்பதில், கவர்ச்சித்தன்மைவாய்ந்தவர்களாக இருப்பதில் வல்லவர்களாக இருப்பதில் ஐயம் இல்லை; அவர்களது செயல்கள் காந்தத் தன்மை பொருந்தியதாய் இருக்கும். சுற்றிச் சுற்றித் திசைத்திருப்பமானிகளை இழுக்கவல்ல magnetometerகளைப்போல் தன்னை மற்றவர்கள் வந்து சதா!தொல்லைகளுக்கு (உலகார்ந்த, இனிய) ஆளாக்குவதை இவர்கள் வெறுப்பதில்லை; வெறுத்து விட்டாலும் மற்றவர்கள் இவர்களை குருவாகவே எண்ணி இவர்கள் சொல்லும் கருத்துக்களையும், இவர்களின் வாழ்க்கைச் சிந்தனை, செயல் முறைகளையும் பின்பற்றுபவர்களாகவே இருப்பார்கள் என்று கூடச் சொல்லலாம். அன்பிற்கும், கவர்ச்சிக்கும் உதாரணம் வேண்டியே இவர்களை நாடும் இரசிகர்கள் ஏராளம். எது ஒன்றையும் செய்யும் முன்னர் அதன் கருத்துக்களையும் அதன் விளைவுகளையும் முன்னரே ஊகித்து இது இப்படித்தான் நடக்கும், இதை இப்படித்தான் செய்ய வேண்டும் என்று தீர்மானித்து எதிர்காலக் கண்ணாடியால் அறிந்து கொள்வார்கள். இவர்கள் சாமான்யமாக வெறித்தன்மையில் ஏதாவது ஒன்றில் பித்துப்பிடித்தாற்போல் கவனமோ, எண்ணமோ செலுத்திவிடின் இவர்கள் அந்த முறையைச் சார்ந்து இவர்களை கவர்ந்த அந்த விஷயத்திற்கு நபர்களுக்கு ஆயுள் முழுவதும் அடிமைகளாகி, தேவதா விசுவாசிகளாகி பிடிவாதமாய் அன்பின் கடலில் குளித்துத் தெகிட்டிப்போனாலும் அதிலேயே மூழ்கிவிடுவார்கள்; இவர்கள் அதுபோன்று தீவிர அபிமானிகளாக இல்லாது போனால் தீர்க்கதரிசிகளாகவே வாழ்நாளில் ஊருக்கும் நாட்டிற்கும் 'வழிகாட்டி'களாகக் கூட மாறிவிடலாம். இவர்கள், இவர்களுக்கென்றே மற்றவர்களிடம் காட்டும் அன்பை, இரு பிரிவுகளாக்கிக் காட்டலாம். ஒன்று காதல்: இது பெரும்பாலும் பரஸ்பரம் பெற முடியாததொன்று; இது ஆண்-பெண் இருபாலார்க்கிடையே எழும் தெய்வீகத் தொல்லை. மற்றது தாயன்பு. இது உலகத்திலுள்ள ஜன சமூகங்களை சாதி மத பேதமின்றி குழந்தைகளாக பாவித்து அன்பு செலுத்தி அதில்வரும் இன்பத் துன்பத் தன்மைகளை ஒருமித்தே, இன்பத் தாயன்புத் தொல்லையாகவே கருதி சதா தாய்மையைப் பொழிவது. தாயன்பு என்பது சக்தி-சிவம் இரண்டிற்கும் பொது. இறைவனைத் தாயாகவும் தந்தையாகவும் பாவித்து அரற்றவில்லையா? இன்பத்தினை பெறவிழையும்போது பிஞ்சுக் கால்களால் உதைத்தாலும் அது அம்மாவாய் இருந்தால் என்ன? அப்பாவாய் இருந்தால் என்ன? அப்படித்தான் இருப்பார்கள், இந்த தாயன்புப் பித்தர்கள்; இப்படி ஒரு சாரார் இருப்பார்கள் என்று வைத்துக் கொள்வோம். இன்னும் சிலர் எதையும் கலைக் கண்களைக்கொண்டே இரசிப்பார்கள். இவர்கள் கவர்ச்சியில் ஆபாசம் என்று குற்றங்காணுகிறவர்களைக் கண்டு இவர்கள் சிரிப்பார்கள். அழகிலும், கவர்ச்சியிலும் கலையூட்டி மகிழும் சித்திரதாரர்களாகவும், இசையிலும், இனிமையிலும் உயிரூட்டி, மயங்கித்திரியும் இசை ஞானிகளாகவும், நடிகர்களாகவும்கூட இவர்கள் தொழிலேயே கலைக்காகவே அர்ப்பணித்துக் கொள்வார்கள். பெரும்பாலும் புகழ்ச்சியை அதிகமாக விரும்பினாலும் புகழ்பவர்களின் தன்மைகளைப் பொறுத்து இவர்கள் இரசனை மாறுபடும். கலையைப்பற்றியே தெரியாத ஒருவன் உள்ளுக்குள் வேண்டா வெறுப்பாக இருந்து கொண்டு வெளியில் கைதட்டி ஆரவாரம் செய்வானாயின் அவன்பாடு படுதொல்லையாய்ப் போய்விடும். எதில் இரசனை கொண்டாய்? எது பற்றி இரசனை பிறந்தது? நீ அந்த இடத்தை ஏன் இரசித்தாய் என்றெல்லாம் கேள்வி கேட்டு அவனைத் திக்குமுக்காடச் செய்துவிடுவார்கள். அதாவது கலை, அழகு, இனிமை, ஓவியம், கவர்ச்சியிலேயே இவர்கள் வாழ்நாளைக் கழித்துவிடுவார்கள். சுக்ரனின் ஆதிக்கம் பெற்றிருக்கின்ற காரணத்தால் எந்த ஒரு பொருளையும் ஆசையாக விரும்புவார்கள். தலைசிறந்த கட்டட நிபுணர்களாகவும், சிற்ப சாஸ்திரிகளாகவும், புகைப்படவல்லுநர்களாகவும் இருப்பார்கள். பொருளைக்கருதாமல் புகழுக்காகப்

திரு. E. S. குமரன்,
294, 1st கிராஸ், தில்லைநகர்,
சேலம்.

பாடுபடும் தன்மையுடையவர்கள்; இவர்களின் நிலைநிறுத்த முடியாத ஒரு குணம் என்னவென்றால் எல்லாவற்றிற்கும் பொறுமைப்படுவது; எதற்கெடுத்தாலும் ஒத்துப்போகாமல் வேற்றுமை கொள்வது; சீற்றம் கொண்டுவிட்டால் சாகும் வரை போராட்டத்தில்

உணர்ச்சிவசப்பட்டு தனக்கு ஆகாதவர்களைக் கண்டால் சுடுகாட்டிலும் பொங்கி சாபமிடக்கூடிய ஒரு வித மான எரிமலைப்பாணிகள்; ஆகவே இது போன்றவர்களிடம் பழகுபவர்கள் ஒரு படி இறங்கியே உறவு கொண்டாட வேண்டும். எல்லை மீறினால் ஆணாயினும் பெண்ணாயினும் வீணே அவதிக்குள்ளாக வேண்டியதுதான். இருந்தும் இவர்களுடைய கவர்ச்சியால் அநேகர் இவர்களை நண்பர்களாக்கிக் கொள்ள ஆசைப்படுவார்கள். இருந்தாலும் 5-ம் எண்தாரர்களுடன் இவர்களது நட்பு சாத்தியமில்லை.

## எண்ணைக் கொண்ட தேதிகள்

6, 15, 24 தேதிகளைக் கொண்ட எந்த மாதமாயினும் சரி அல்லது உச்ச காலக் கட்டங்கள் என்று சொல்லப்கின்ற ஏப்ரல் 20 லிருந்து மே 20—27 வரையிலும் மற்றும் செப்டம்பர் 21 லிருந்து அக்டோபர் 20-27 வரையிலும் உள்ள நாட்கள்.

## எண்ணின் தேவதை

சுக்ரன் (Venus) (அதிருஷ்ட தேவதை) (அன்பு, காதல், ஆசைக் குவியல்களின் அரசன்).

## முக்யமான தினங்கள்

வெள்ளி, வியாழன் மற்றும் செவ்வாய்.

## முக்யமான தேதிகள்

3,6.9,12,15,18,27,30, (3,6,9 வரிசைகளில் வரும் எந்த எண்களாயினும் சரி) போன்றன.

## முக்யமாக வேண்டிய நட்பு

பொதுவாக பொது ஜன விரும்பிகள். இருந்தும் 'அதிர்வு இராசிச் சுற்றுக்களின்' சமிக்ஞைப்படி 3,6, 9ஐச் சார்ந்தவர்களுடன் உள்ள நட்பு நன்மை தரும். பொதுவாக 5-ம் எண்தாரர்களுக்கும் இவர்களுக்கும் அவ்வளவு ஒற்றுமை இராது.

## முக்யமான நிறங்கள்

பொதுவாக மெல்லியது முதல் ஆழ்ந்தது வரை உள்ள நீலம், நீல இழைகள், இளஞ்சிவப்பு, (ஊதாச் சிவப்பு மெல்லியது). கருமையையும், ஆழ்ந்த Purple நிறத்தையும் தவிர்த்தல் அவசியம்.

## முக்யமான மணிகள் [நகைகள்]

அதிருஷ்டம் வாய்ந்த 'Turquoise' என்னும் ஒளிபுகாத ஆகாய நீலமணியில் மோதிரம் செய்து கொள்ளலாம். Matrix என்றும் இதனை அழைப்பார்கள். மற்றும் Emerald (பச்சை, மரகதக்கல்) என்னும் மணியிலும் அணிகள் உசிதம்.

## முக்யமான உடைகள்

எல்லா இழைகள் கலந்தவண்ணம், அதாவது மெல்லியது முதல் ஆழ்ந்தது வரை நீல நிறத்தில் உடைகள் கவர்ச்சியைத்தரும். அல்லது Navy Blue ஆகவும் Full Blue ஆகவும், Real Blue வாகவும் இருக்கலாம். ஆனால் 4-ம் எண்களின் இராசியான, 'Electric Blue' வாக இருத்தல் கூடாது. இரண்டாம் தரமாக இளஞ்சிவப்பு, இளம் ஊதா நிறங்களிலும் வரிகளிலும் ஆடைகள் அணியலாம். Red, Scarlet, Crimson நிறங்களில் அணிவதால் வரும் அசௌகரியங்களை அவர்களே பழக்கவழக்கங்களில் தெரிந்து கொள்வார்கள். ஒரு வேளை மேற் சொன்ன வேண்டாத நிறங்கள் மார்ச் 21லிருந்து ஏப்ரல் 24 வரையிலும் அல்லது அக்டோபர் 21லிருந்து நவம்பர் 24 வரையிலும் பிறந்த 6-ம் எண்தாரர்களுக்கு அதிருஷ்டமாகவும் இருக்கலாம். அது அவரவர்களுடைய பிறந்த தேதிகளைப் பொறுத்தது.

## சங்கீதத்தில்

'ஏழிசையாய் இசைப்பயனாய்' என்றெல்லாம் இசையின் மகத்துவத்தை அறிந்த இவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். வெறும் அதிர்ச்சியும், பேரிடியும் முழங்கிவரும் முரட்டு ஒலிகளைக் கேட்டாலே இவர்களுக்கு Allergy. போதையில் காதல் கனிவூட்டும் இனிய இசைக்கும், இசை ஞானிகளுக்கும் தங்களையே அர்ப்பணித்துவிடுவார்கள். எந்த வகை இசையாயினும் சரி அதில் முறையும், சுருதியும், லயமும், இனிமையும், நயமும் காணத்துடிப்பார்கள். அப்படி இவர்கள் கேட்கும் இசையில் அமைந்துவிட்டால் இவர்கள் காற்றிலே சிறகடித்துப்பறந்துவிடுவார்கள். பொதுவாக கனிவான இசைக்குக் கல்லும் உருகும் என்பார்களே அதைப் போல் காதலான இசைக்கும் இவர்கள் உருகிவிடுவார்கள்: இசையின் நயம் அறிந்து இரசிக்கும் ஆத்மார்த்தமான இரசிகர்கள்.

## உடற்கோளாறு பற்றி

தொண்டை சம்பந்தமான நோய்கள், மற்றும் மூக்கு சம்பந்தமான

**பெண்மையின் எழிலுடனும் ஆண்மையின் வலிவுடனும் துவாரபாலகர், வேலூர் கோட்டை.**
**திரு. கே. சீதாராம் - கோவை.**



நோய்கள், நுரையீரல்களின் மேற்பாசம் சம்பந்தப்பட்ட கோளாறுகள் அடிக்கடி ஏற்படும். இயற்கையின் மந்தாரமும் சிறந்த தேகப்பயிற்சியும் இருந்து தூய்மையான காற்று மேனியில் பட்டால் இவர்களுக்கென்று தனிப்பட்ட நோய்க்குறிகள் எட்டிப் பார்க்காது. பொதுவாக பெண்கள் 'Milk fever' என்று சொல்லப்படும் நோயை தாய்மைப் பருவத்தில் சம்பாதிக்க நேரிடும். வயோதிகக் காலத்தில் இரத்தச் சுற்றோட்டம் சீரோட்டமின்றி இதய சம்பந்தமான பாகங்களில் கோளாறும், வீக்கமும் ஏற்பட வாய்ப்பு உண்டு.

## முக்யமான மாற்றங்கள்

பெரும்பாலும் இவர்களுக்கு 15, 24, 42, 51, 60 ஆகிய வருடங்களைக் கொண்ட நவம்பர், அக்டோபர், மே மாதங்களில் உடற்சம்பந்தமாக முக்யமான மாற்றங்கள் நேரிடலாம்.

## எச்சரிக்கை

மற்றவர்கள் தம்மைப் பார்த்து ஓரளவு பொருமைப்பட்டால் தாங்கள் அதற்கெல்லாம் ஏற்றவர்களே என்று நிதானித்து தாம் மற்றவர்களின் பார்வையாலும், பேச்சாலும், புகழப்படுகின்ற வார்த்தைகளாலும் உயர்த்தப்படுகின்றோமேயன்றி ஒரு நாளும் தூஷிக்கப்படவில்லை என்று கற்பனைக் குதிரையைத் தட்டிவிடுவார்களாயின் நாட்டில் ஏராளமான கலா இரசிகர்கள் தோன்றிக் கொண்டேயிருப்பார்கள். இல்லையெனில், பொருமைத் தீயால் கலைக்களம் கொலைக்களமாகிவிடும்.

## முக்யமான இயற்கை வைத்யம்

எல்லா வகை பீன்சுகள். பசலைக் கீரை, மாதுளம்பழம், ஆப்பிள், இலந்தை, அத்தி, பாதாமி மற்றும் குளிர்ச்சிதரும் முலாம்பழம் போன்றவற்றைச் சேர்த்துக் கொள்ளுதல். கஸ்தூரியால் மேனியை வாசனைப்படுத்துதல் சிரேஷ்டமானது. 'Essence' போன்றவற்றை அளவோடு 'Bread' போன்றவற்றில் சேர்த்துக் கொள்ளலாம். ஏகாந்தமான மந்தார இயற்கை வெளியில் உலாவலாம். ஆழ்ந்து சிந்திக்கலாம். கற்பனைப் பறவை சிறகடித்துப் பறந்தால் அதனைத் தடுக்கலாகாது; தடுத்துவிடின் அதுவே மனநோயாகிவிடும்.

## முக்யமான நபர்கள்

இராணி விக்டோரியா (இங்கிலாந்து) நெப்போலியன் I, ஜார்ஜ் III, வால்டர் ஸ்காட், அட்மிரல் பியர்ளி, மாக்ஸ்முல்லர் மற்றும் கவி மேதை டென்னிசன் ஆரும் எண்தாரர்களுக்கு முன்னோடிகள்.

பாகம் 10

## எண் ஏழின் தன்மைகளும் கொள்கைகளும்

பொதுவாக ஏழாம் எண்ணைக் கொண்டவர்கள் மிகுந்த சுதந்திரப் பறவைகள். தாம் தமக்குள்ளாக தாமே புதுமையைப் படைப்பதில் மிகுந்த அக்கறை காட்டி உண்மையான எண்ணங்களால் எழும் அர்த்தமுள்ள கருத்துக்களையோ, கற்பனைகளையோ எந்நேரமும் பொழிந்து கொண்டே இருக்காமல்போனால் இவர்கள் வாழ்நாள் வீணான நாள் வாழ்வதே துன்பம் என்ற கொள்கையுடையவர்களாய்த் திரிவார்கள். இவர்கள் துறு துறுவென்று அலைந்து கொண்டே இருப்பார்கள். இவர்கள் உள்ளமும் இதயமும் இடப் பெயர்ச்சி செய்து கொண்டே இருக்கும் என்று கூடச் சொல்லலாம். இவர்கள் தங்கள் கால்களில் மட்டும் சக்கரம் கட்டிக்கொள்ள மாட்டார்கள். ஆத்மனையே அலைய விட்டு வேடிக்கைப் பார்க்க கூடிய ஊர் சுற்றிகள் என்றெல்லாம் சொன்னாலும் மிகையாகாது. இதயத்தாலும் உள்ளத்தாலும் Monotonous ஆக இருக்காமல் மாறிவரும் சூழ்நிலைகளையும், புது புது தேசங்களை சஞ்சாரம் செய்வதிலும், அயல் நாடுகளில் குடியேறுவதையும் ஒரு பொழுதுபோக்காக எண்ணி அதற்கெனவே வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொள்வார்கள். பரந்த உலகார்ந்த அறிவு செழிப்புற்று இன்னும் அனுபவ ரீதியாக உருப்பெற்று அறிவுக் கடல்களாக விளங்க முயற்சிப்பார்கள். கவளம் கவளமாக யானைக்குச் சோறிட அது லபக் லபக்கென்று எப்படி விழுங்கிப் பற்றாக்குறையாக நிற்கிறது. அது போலத்தான் இவர்கள் சுற்றும் நாடுகளில் ஏற்படும் அனுபவங்களால் மூழ்கடிக்கும்போதும் பற்றாக்குறை மனப்பான்மைதான் இலங்கும். இவர்களில் சிலர் எழுத்தாளர்களில் தலைசிறந்தவர்களாக விளங்கலாம். ஓவியர்களாகவும், கவிஞர்களாகவும் கூடத் திகழ ஏராளமான சந்தர்ப்பங்கள் உள்ளன. இவர்கள் ஈடுபடும் கிரமங்களில் ஒருவிதத் தத்துவம் குடிகொண்டிருக்கும். இந்தத் தத்துவத்தைஒருவிதச் சுவை கலந்து இவர்கள் செய்யும் காரியங்களில் இலேசாகக் கலந்து மணம் கூட்டுவார்கள். உலகார்ந்த வாழ்க்கையின் மெய்யானசம்பவங்களில் இவர்கள் அலட்சியம் காட்டுவார்கள். ஏழாம் எண்ணைக் கொண்ட பெண்தாரர்களுக்கு ஒருவித ஏக்கம் கலந்த மனக்கவலை அடிக்கடி ஏற்படும். அதாவது இவர்கள் தங்கள் எதிர்காலத்தைப்பற்றி மிகவும் எண்ணி நடுங்குவார்கள். என்ன ஆகிவிடுமோ ஏதாகிவிடுமோ என்று அலக்கடித்துக் கொண்டு விரைவில் திருமணம் செய்து கொண்டு கூட்டாளியை ஏற்றுக் கொள்ளாவிடில் அதை ஒரு தீவிரத் தொல்லையாகக்கூட கருதிக் கவலைப் படுவார்கள். விதிக்கடலின் பொங்கி வரும் அலைகளுக்கு தாம் ஆளாகாமல் மாபெரும் பாறைகளினால் தாம் தெப்பம் கொள்ள துணையைத் தேடி உய்வடைவார்கள். பொதுவாக ஏழாம் எண்தாரர்கள் தலைசிறந்த தொழில் அதிபர்களாகவும், நுணுக்கமான வியாபாரிகளாகவும், ஏற்றுமதி இறக்குமதி துறைகளினால் அயல் நாடுகளில் தொடர்பு கொண்டு மிகுந்த பொருள் ஈட்டுபவர்களாகவும், கப்பல் அதிபர்களாகவும், நகை வியாபாரிகளாகவும், கப்பல் தலைவர்களாகவும் இருக்க வாய்ப்புக்கள் காணப்படு

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை | ... | 1 | 00 |
| பாலசரிதம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) | ... | 0 | 75 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் | ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் | ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) | ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) | ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி | ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) | ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா) | ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) | ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் — தி. தி. தே — | ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, | ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, | ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) | ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) | ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை | ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) | ... | 4 | 00 |
| திருவாய்மொழி (விளக்கவுரையுடன்) பாகம் 1 | ... | 7 | 50 |
| (திரு. டி. பி. பழனியப்ப பிள்ளை) பாகம் 2 | ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) | ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் | ... | 0 | 20 |
| நித்யாநுஸந்தானம் — தி. தி. தே — | ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) | ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி.தி.தே - | ... | 8 | 00 |

## தி. தி. தேவஸ்தான வெளியீடுகளுக்கான விற்பனை சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்து வாங்கினால் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினால், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

கின்றன. ஒருவித வியப்பு என்ன வென்றால் ஏழாம் எண்தாரர்கள் மத சம்பந்தமாகவும் உயர்ச்சி அடைய மார்க்கங்கள் காணப்படுகின்றன. இவர்கள் தாங்களே மதங்களை உற்பத்தி செய்யக்கூடியவர்கள். இவர்கள் தலைசிறந்த வரப்பிரசாதிகள். இவர்கள் காணும் காட்சிகளின் கற்பனை நனவாகி இவர்கள் எதிர்காலத்தில் அவற்றையெல்லாம் கூட்டி அனுபவிக்கும் பேறு பெற்றவர்கள். வெறும் பகற்கனவு காணும் துரதிஷ்டவாசிகள் இவர்களல்லர். இவர்களுக்கென்று இறைவன் அளித்த அருட்பிரசாதங்களான உள்ளுணர்வு, மாயா சாதனை, ஞான திருஷ்டி போன்றவற்றை கொண்டு 'செயற்கை சொர்கம் படைக்கக்கூடிய தேவதவசிகள்' என்று மெய்யாகவே இவர்களைக் காட்டிப் பேசலாம். இவர்கள் செய்யும் மாபெறும் தவறு; எதற்கென்றாலும் அதிக அவசரப்படுவது. அதாவது மேற்கொண்ட செயலைவிடுத்து பிறிதொன்றைத் தாறுமாறாய் செய்வார்கள். நிதானம் இவர்களின் முட்டுக்கட்டை. அது ஒரு வகையிலும்இவர்களை பீடிக்காது. அவசரம் இவர்களின் தனிப்பட்ட பலஹீனம்.

### எண்ணைக் கொண்ட தேதிகள்

7, 16, 25, தேதிகளைத் தாங்கி வரும் எந்த மாதமாயினும்சரி அல்லது 'சந்திரனின் வீடு' என்று சொல்லப்படும் உச்சகாலக் கட்டங்களான ஜுன் 21 லிருந்து ஜுலை 20-27வரை. இவர்களுக்கும் இரண்டாம் எண்தாரர்களுக்கும் உள்ள நெருக்கம் அதிக நட்பைத்தரும்.

### எண்ணின் தேவதை

'Neptune' என்ற சூரியனைச் சுற்றும் கிரகங்களில் ஒன்று. ரோமானிய நம்பிக்கைப்படி கடலுக்கெல்லாம் தேவன். இந்து புராணப்படி வருண பகவான். காலச் சுழற்சியின் கணிதப்படி 'நீர் பரப்பின் மூதற் கட்டம்' என்ற வரிசையில் சந்திரன்-2 உடன் ஈர்ப்பு சக்தி அதிகம்.

(24-ம் பக்கம் பார்க்க)

(செப்டம்பர் மாதஇதழ் தொடர்ச்சி)

# தில்லையில் நந்தனரும் குலசேகாரும்

## தில்லையின் எல்லையில்

தில்லையின் எல்லையைக் கண்டதும், நந்தனர் மண்மிசை விழுந்து வணங்கினர். எழுந்து கோயிலை நோக்கி நடந்தார். தில்லையில் அந்தணர்களின் வேள்விச்சாலைகளைக் கண்டு அஞ்சி, மதிலினுள் செல்லாமல் தில்லையின் எல்லையைத் தொழுதவண்ணம் இரவுபகலாக வலம்வந்து கொண்டிருந்தார். தாம் உள்ளேபோக இயலாமையை நினைந்து நினைந்து மனம் உருகினர். சொற்கள் வரவில்லை; உடம்பும் சோர்வுற்றது; சோர்வு மேலிடக் கண்கள் அயன்று விடவே, துயிலும் வந்தது. கனவில் கூத்தபெருமான் புன்முறுவல் தவழத் தோன்றினர். நடராஜப் பெருமானின் கட்டளையைக் கனவில் கேட்டார்.

''இப்பிறவி போய் நீங்க
எரியினிடை நீ மூழ்கி
முப்புரி நூல் மார்பருடன்
முன் அணைவாய்''

எனக் கூத்தாடும் சிதம்பரநாதன் மொழிந்தார். சேக்கிழார் சொற்களை நாம் விளக்கத்துடன் அநுபவிப்போம். ''நந்தா, நீ தீக்குளித்து நம்மை வந்தடைவாயாக'', எனத் தொண்டருக்கு அறிவித்த பின், தில்லைவாழ் அந்தணர்கள் கனிவிலும் தனித்தனியாக தன் உத்தரவைக் கூறினர், நடராஜப் பெருமான். இறைவனுடைய கட்டளையைத் தலைமிசை கொண்டு, அந்தணர்கள் அச்சத்தோடு கோயில் வாசலின் முன்பு வந்து கூடி, மதில் சுவரின் அருகாமையில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த நந்தனரிடம் பயபக்தியுடன் அணுகி, பெருமான் இட்ட கட்டளையைக் கூறி, நந்தனரை அழைத்துக் கொண்டு தீ வளர்த்திருக்கும் தீக்குளியினிடம் சேர்த்தனர். நந்தனர் கைகூப்பித் தொழுதவண்ணம் கூத்தரின் திருவடிகளை நினைந்து, நினைந்து அவரைப் பாடிக் கொண்டே தீயினில் மூழ்கினர். தீயினிலிருந்து வெளிவரும்போது அவர் தோற்றத்தை சேக்கிழார் கூறுகிறர்:

''செந்தீ மேல் எழும்போது
செம்மலர் மேல் வந்தெழுந்த
அந்தணன் போல் தோன்றினர்''

## தில்லை மூவாயிரவர்:

செந்தாமரை மலரில் தோன்றிய பிரமன் போல நந்தனர் தோற்றமளித்தாராம். தில்லை மூவாயிரவர் நந்தனரைக் கைகூப்பித் தொழுதார்கள். கூத்தனரின் திருவடிகளைத் தரிசிக்க நந்தனரைத் தில்லை நகரத்துக்குள் கொண்டு சென்றனர். கோவிலின் தெற்குக் கோபுரத்தைக் கண்டு உருகினர். தொழுது வணங்கினர். விரைந்து கோவிலுக்குள் சென்று, அம்பலத்தாடும் ஆசானைக் காண்கின்றர். கண்ணீர் தாரை தாரையாக வழிகின்றது. ஆண்டவனின் அருளால் அவர் முன் கைகூப்பித் தொழுது கொண்டு நின்றதை, சேக்கிழார் சொல்லலுற்றர்:

''சுந்தரத்தா மரைபுரையும்
துணையடிகள் தொழுதிருக்க
அந்தமிலா ஆனந்தப்
பெருங்கூத்தர் அருள்
புரிந்தார்''.

இத்தீயானது நந்தனருக்குத் திருமஞ்சனமாக அமைந்தது என சேக்கிழார் செப்புகிறர். திருநாளைப்போவாராகிய நந்தனர் சிதம்பரப் பித்தம்தெளிந்து, பக்தி வடிவத்தோடு கோதிலா குணக் கடலாகவும் காணப்பட்டார். சில ஆண்டுகளுக்கு முன்பு அவதரித்த பெரியாரொருவர் நந்தனரின் புகழைப் பாடுகின்றர்:

''நந்தனர் அவர் பெயராம்–வெகு
நல்லவராம்–இந்தத் தொல்லுலகில்
அன்பு புரியும் பேரின்ப சுகம்
கொள்ளை கொள்ளவோ பிறந்தார்''

## அப்பரும் அழகிய மணவாளதாசரும்

இங்கு நாம் ஒன்றை விளக்குவோம். யார் புலையர், யார் நீசர் என்ற கருத்து அநேகர் மனதில் ஊசலாடுகிறது. நந்தனுடைய லட்சியம் அவருடன் வாழ்ந்த புலைச்சேரியில் குடிகொண்ட மக்களில் பெரும்பான்மை பரவியிருந்தது. அவர்களைத் தன் சிந்தனையால், வாக்கால், மெய்யால் உயர்த்திவிட்டார் நந்தனர். இக்கருத்துக்களை அப்பர் என்று அழைக்கப்பட்ட திருநாவுக்கரசர் முழங்குகிறர். பாமரன் எத்தகைய பெருஞ் செல்வனயினும், பக்தியில்லாவிடில் நாம் மதிக்கமாட்டோம் என்கிறர். மாதேவனுக்கு

டாக்டர், G. T. கோபாலகிருஷ்ண நாயுடு,

ஏகாந்திரராகிப் பக்தி செலுத்துவோரைத் தான் பக்தர்கள் மதிப்பார்கள்; அங்கமெலாம் குறைந்து அழுகும் தொழு நோயராயினும் சிவ பெருமானுக்கு அன்பர்களாயிருந்தால்,

''அவரன்றே யாம் வணங்கும்
கடவுள் ஆவர்'',

என்று கூறி முடிக்கிறர் அப்பர் பெருமான். இதே போன்று, அழகிய மணவாள தாசன் என்றழைக்கப்படும் பிள்ளைப் பெருமாளய்யங்கார் பாடுகிறர்:

''பாதியாய் அழுகிய கால் கையரேனும்''

என்று தொடங்கும் பாடலில் குஷ்டரோகிகளும் பக்தர்கள் ஆகிவிட்டால் அவர்களைத் தாம் தமது ஆசாரியராக

மதிப்பதாய்க் கூறுகிறார். மீண்டும் பாடுகிறார் நம் பிள்ளைப் பெருமாளய்யங்கார் உயர் குலத்தாரைப் பற்றிப் பிரஸ்தாபிக்கும் வகையில்:

சாதியாலும், அனுஷ்டானங்களாலும், சதுமறையின் வேள்விகளாலும் சிறந்தவர்களாயினும், அவர்கள் பக்தியற்றவர்களானால் அவர்களே புலையர்கள் என்கிறார்.

இத் தொடரில் அவர் கூறுவது:

''பொன்னரங்கம் போற்றாதார்
புலையர் தாமே'',

பொன்னரங்கம் போற்றாதவர் மறையோராயினும் புலையரே என்று முழங்குகிறார். பக்தராய்ப் பணிபுரிவோர் எக்குலத்தினராயினும் தொண்டர்களே. உயர் குலத்தோர் பக்தியுடன் தொண்டு புரியவில்லை என்றால் அவர்களும் நீசர்களே.

''நாமார்க்கும் குடி அல்லோம்
நமனை அஞ்சோம்''

என அப்பர் தொடங்குகிறார். எத்தகையப் பெருஞ்செல்வனையும் மதிப்பதில்லை எனவும், அரசனையும்கூட மதிப்பதில்லை, நமனையும் மதித்துப் பயம் கொள்வதில்லை என அப்பர் கூறுவதில் சமதர்மப் பெருங்கொள்கையுள்ள சைவ சமயத்தின் உச்ச நிலையைக் காண்கிறோம். தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் இக் கொள்கையே கைப்பற்றுகிறார்:

''நுமர்களைப் பழிப்பவராகில்
நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள் தாம் புலையர் போலும்,
அரங்கமா நகருளானே!''

புலையன் என்று ஒரு பாகவதனை சாதி கருதிக் கூறுவோர் தாங்களே புலையராகிவிடுகிறார்கள் எனத் தொண்டரடியன் தெள்ளத் தெளியப் பகிர்கின்றார். அரங்கநாதனின் கருத்தும் இதுவே என்கிறார்.

நந்தன் சரித்திரம் ஆனந்தம்:

நந்தனார் பக்தி வெள்ளத்தைக் கடந்து உயர்ந்துவிட்டார். அவருடைய அருமை பெருமை எல்லோரும் அறிந்தனர். அவர் உள்ளம் பக்திப் பொன் வேய்ந்த அம்பலம் ஆயிற்று. அவர் இறையருளில் அசையாத நம்பிக்கை கொண்டு, எத்தனையோ வசதிக் குறைகளையும் இடுக்கண்களையும் நின்று வென்று தன் குறிக்கோளையே நோக்கிச் சென்றார். அருளினால் கிடைத்த மெய்ஞ்ஞான உணர்வினாலும், பக்திப் பெருங்காதலாலும் நாயன்மார்களில் உயர்வாக நந்தனார் மதிக்கப்படுகிறார். அவருடைய வாழ்க்கைச் சித்திரத்தைக் கண்டு நாம் மகிழ்வோம். இச்சரிதையை நம் இனத்தாருக்கும் பகர்ந்து, களிப்படைவோம். நாளைப் போவாரின் முழு வடிவை பாரதியார்,

''நந்தன் சரித்திரம் ஆனந்தம்''

என்றுரைக்கிறார். நந்தனாரின் சித்தம் உருகி, நம்மை எல்லோரையும் அணைத்துக் கொள்ளும்படி அவரிடம் அணுகுவோம். அவர் அணுகின அம்பலத்தை, அநுபவித்த நடராஜப் பெருமானை நாம் கண்கூடாகக் காண்போம்.

நடராஜப் பெருமானின் தோற்றம்:

''குனித்த புருவமுங் கொவ்வைச்
செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்
மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்த பொற்
பாதமுங் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேயிந்த மாநிலத்தே''.

தில்லைத் திருநடனத்தைக் கண்டோம்; மைதீட்டிய ஒள்ளிய கண்ணினுடைய உமாதேவியார் கண்டு மகிழ்ந்து நிற்ப, எம்மிறைவன் கனக சபையின் கண்ணே எந்நாளும் செய்கின்ற ஆனந்த நடனத்தைக் காண்பதே கண்ணினைப் பெற்ற பயனாகும். இறைவனின் அழகை அடி முதல் காணத் தொடங்கி, ஓரழகு கண்டால் வேறழகு காண முடியாதபடி பிரம்மிக்கிறோம். திருவடியைக் கண்ட கண் கொண்டு மற்றினைக் காண்பதரிது. இறைவனுடைய எல்லையில்லாத எழிலைக் கண்டபோதுதான் இவ்வாறு அழகு முழுதும் காணாது ஒவ்வோர் நிலையைக் கண்டு இன்புறுகிறார்கள். இதே போன்று, திருப்பாணாழ்வார் திரு அரங்கனைக் கண்டதும்,

''என்னமுதனைக் கண்ட கண்கள்
மற்றொன்றினைக் காணாவே

என்று பாடுகிறார். கம்பன் திருவாக்கிலும் இந்த வர்ணனையைக் காண்போம். ஸ்ரீ ராமனுடைய அழகை நடராஜ வடிவத்தின் எழிலோடு காண்போம்:

''தோள் கண்டார் தோளேக் கண்டார்,
தொடுகழற் கமலமன்ன தாள்
கண்டார்
தாளே கண்டார்,.........''

சிதம்பரத்தில் சிற்சபையிலே, நடராஜமூர்த்திக்கு வலப்பக்கத்திலே மாசுபடியா ஆகாய மூர்த்தியாகிய சிதம்பர ரகசியம் இருக்கின்றது. இம் மூர்த்தம் நாமரூப விகற்பபடாதது. ஆதலால் அனைவராலும் வழிபடற்குரியது. சிற்சபையில் நடனஞ் செய்கின்ற ஆனந்த நடராஜனது திருவுருவம் பஞ்சகிருத்தியங்களைக் காட்டுவதோடு, ஞானமயமாகிய சிதாகாசத்தின் இயல்பையும் அறிவுறுத்துவதால், இந்நடராஜ மூர்த்தம் பார்க்கச் சிறப்புடையது.

தில்லை நடராஜா நீயே பஞ்சாக்ஷரம்:

உயிர்க்கு உறுதி பயக்கும் மகா மந்திரமாகிய பஞ்சாக்ஷரம் நடராஜ வடிவமாக அமைந்து நின்றதை பின் வரும் வாக்கால் காண்போம்:

''ஆடும்படி கேணல் அம்பலத்தா
னையனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடு

மகர முகரம் வளர் தோள் சிகரம்
பகருமுகம வா முடியப் பார்''

இவ்வாசகத்தின் விளக்கம்: மூர்த்தியின் மூலம் நமசிவாய எனும் பஞ்சாக்ஷரம் நம் கண் முன் நிற்கிறது.

'ஐயனே! எல்லா நன்மைகளுக்கும் ஆதாரமாகிய திருச்சிற்றம்பலவன் நடனஞ் செய்யும் திருவுருவத்தின் இயல்பு என்னே! நினைத்தற்கரிய திருப்பாதத்திலே நகாரம் பொருந்தும்; திருவயிற்றிலே மகாரம் பொருந்தும்; திருத்தோளிலே சிகாரம் பொருந்தும்: சொல்லப்பட்ட திருமுகத்திலே வகாரம் பொருந்தும்; திருமுடியிலே யகாரம் பொருந்தும். ஆகையால் திருப்பாதத்தில் எழுந்து, திருவயிற்றில் நின்று, திருத்தோளில் பாய்ந்து, திருமுகத்திலே பொலிந்து, திருமுடியிலேஅமர்ந்த நமசிவாயத்தை என்றும் நம் கண் முன் வைப்போம்;நமசிவாய என்னும் நடராஜப் பெருமானை அநுபவிப்போம். எஞ்ஞான்றும் அஞ்செழுத்தே ஆனந்தத் தாண்டவம் என்பது உண்மை.

**கூத்தப்பெருமான் அவயவ அமைப்பு:**

ஆனந்த நடனம் கொண்ட நடராஜ மூர்த்தியின் திருக்கரங்களில் அமைந்தவையைக் கண்ணுறும்போது, இறைவனுடைய தொழில் இத்தன்மையுடையது எனத் தெள்ளிடை மலர் போல் தெற்றெனத் தெரிகின்றது:

''தோற்றத் துடியதனிற் றேயுந்
திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—
ஊற்றமா
யூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோத
முத்தி
நான்ற மலர்ப்பதத் தே நாடு''

இச் செய்யுளை விளக்கும் வகையில், நடராஜமூர்த்தியின் கரங்களைக் காண்கின்றோம்; பாதங்களைப்பகர்கின்றோம்; ஒவ்வொரு அவயமும் பணித்த பணியைச் செய்கின்றது. டமரம் ஏந்திய திருக்கரத்திலே படைத்தற்றொழில் விளங்குகிறது; அமைத்த திருக்கரத்தில் காத்தல் தொழில் பரிபாலிக்கின்றது;அக்னி ஏந்திய திருக்கரத்திலே சங்காரத் தொழில் சித்தரிக்கிறது. உறுதியாய் ஊன்றிய திருப்பாதத்திலே மறைத்தல் தொழில் மலர்கின்றது; தூக்கிய திருப்பாதத்திலே அருள் அமைந்ததைக் காண்கிறோம். சிற்றம்பல நடராஜ வடிவம் தில்லையில் மட்டுமல்ல, எல்லோருடைய ஹிருதய கமலத்தில் நின்றும், இருந்தும், பொருந்தியும் உளது. இத்தில்லைத் திருநடனத்தைக் கண்டு தரிசித்த நந்தனாருடைய கண்ணிலே பின்னர்க் காண்பதற்குத் தகுந்த பொருள் வேறு இல்லை.

**ஆனந்தக் கூத்தனின் காட்சி:**

இறைவன் கனகசபையோனின் ஆனந்த நடனத்தைக் காண்பதே கண்ணினைப் பெற்ற பயனாகும் என மகிழ்ச்சியடைகின்றார் நந்தனார். அவர் தரிசிக்கும் ஆனந்தக் கூத்தனைக் கண்டு களிப்போம் வாரீர்! நடராஜக் கூத்தனைக் கண்டு கொண்ட நந்தனார் எண்ணம் பரிமளிக்கிறது. வேறு பிறவியும் வேண்டாம்; தில்லை நடராஜனைத் தரிசனம் செய்து கொண்டேயிருக்க இம்மனிதப் பிறவியிலேயே ஜீவியத்தைக் கழிக்க வேண்டும் என வரம் கேட்கிறார் அறுபத்துமூவருள் நின்ற நாயனார் என்ற நம் நாயகனாகிய நந்தனார். இதே போன்று தொண்டரடிப் பொடி ஆழ்வாரும் வேண்டுவது அதுவே:

''பச்சை மாமலை போல் மேனி பவள
வாய்க் கமலச் செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம்
கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர
லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகருளானே!''

திருவரங்கனைக் கண்ணாரக் கண்டு கொண்டே தன் வாழ் நாட்களைக் கழிக்க வேண்டுமென்றும், தனக்கு இந்திரலோகம் கிட்டினாலும் அப்பதவி வேண்டாமென்றும், இப்பிறப்பில் ரங்கராஜாவைப் பார்த்துக்கொண்டே, கண் குளிர அநுபவித்துக் கொண்டே, திரு அரங்கத்தில் காலத்தைக் கழிக்க இருக்கும் வாய்ப்பு அமைய வேண்டுமெனப் பாடுகிறார் தொண்டரடிப் பொடி ஆழ்வார்.

இதைப் போல் சேர நாட்டு மன்னன் குலசேகர ஆழ்வார், திருநாளைப் போவான் என்ற நாமம் பெற்றவர். 'நாளை, நாளை' என்று சொல்லிக் கொண்டே பல நாள் கழிந்தன. அரசை உதறிவிட்டு திருஅரங்கம், சித்ரகூடம் தன்னில் விரைந்தார் நம் ஆழ்வார். 'திருவரங்கத்திற்கு நாளைப் போவோம், நாளைப் போவோம்' என்று பேரார்வத்தோடு இருந்தார் குலசேகர ஆழ்வார் என்னும்போது திருநாளைப் போவாரை, நந்தனாரை நினைப்பூட்டுகிறார்.

(தொடரும்)

---

ஸ்ரீ மணவாளமாமுனிகள்—திருப்பதி.
திரு. எஸ். வி கே. எஸ். ஸ்ரீநிவாசன்,
திருப்பதி.



(20-ம் பக்கத் தொடர்ச்சி)

### முக்யமான தினங்கள்

ஞாயிறு, திங்கள்.

### முக்யமான தேதிகள்

7, 16, 25 மற்றும் மாற்றங்களுக்கு சாதகமான (1, 2, 4 இனங்களின் கூடுதல்) 4,10,13,19,20,22,29,31 தேதிகள்.

### முக்யமாக வேண்டிய நட்பு

2-ம் எண்தாரர்களுடன் நெருங்கி நட்பு செய்து கொள்ளலாம். மற்றும் 1, 4, எண்தாரர்களுடன் இரண்டாம் தரமாக பழகலாம்.

### முக்யமான நிறங்கள்

எல்லா இழைகளைக் கொண்ட பச்சை மற்றும் சாம்பல் நிறம் அல்லது மங்கலான மெல்லிய நீலம் போன்ற நிறங்கள். வெள்ளை மற்றும் மெல்லிய மஞ்சள் வண்ணம்.

### முக்யமான மணிகள் (நகைகள்)

Moon stone அல்லது சந்திரகாந்தக் கல், முத்து, மற்றும் 'Cat's eye' என்னும் மணி, அல்லது வைடூர்ய மணி போன்றவற்றில் மோதிரமோ நகைகளோ அணியலாம்.

### முக்யமான உடைகள்

இரண்டாம் எண்தாரர்களைப்போல் மெல்லியது முதல், மங்கலான நிறங்களில் பச்சை, மஞ்சள், மற்றும் தங்க மஞ்சள் வெள்ளை நிற இழைகளில் உடைகள் அணிந்தால் கம்பீரமாக இருக்கும். மங்கலான மெல்லிய நிறங்கள் இவர்களுக்கு உசிதமானவை. படுக்கை நிறங்களிலும் 'Pastel shades' உபயோகித்தால் ஆரோக்யம், நிம்மதி, குதூகலம் ஏற்படும்.

### சங்கீதத்தில்

இரண்டாம் எண்தாரர்களைப்போல் இனிமையான நரம்பு மற்றும் காற்று இயைந்து இழைந்து வரும் இசைக்கு மிகுந்த உற்சாகத்தையும் ஆதரவையும் அளித்து அதனூடே சிந்தனைக்கு விருந்தளிக்க ஓடுவார்கள். வயலின், பைப், புல்லாங்குழல், ஹார்ப், செல்லோ வாத்யங்களின் மேன்மை இசையை உணர்ந்து இரசிப்பார்கள்.

### உடற் கோளாறுபற்றி

எண் கணித சாஸ்திரங்களின் தொகுப்பில் இருக்கும் மற்றைய நபர்களைவிட அதிகமான கோபமும், தொந்தரவும், கவலையும் தாக்குறும் ஏழாம் எண்தாரர்கள் ஒரு வகையான மன நோய்க்குக்கூட ஆளாகலாம். இவர்கள் மேற்கொள்ளும் செயல்கள் தங்கு தடையின்றி பனிச்சறுக்குப் போல் ஓடிக்கொண்டிருந்தால் மலையையும் தகர்த்து கடலில் அள்ளி வீசி அணை போட்டுக் கட்டக்கூடியவர்கள். இவர்கள் செய்கின்ற பணிகள், முறைகள் ஓரளவு சீர்கெடினும் இவர்கள் மிகவும் மனச்சோர்வடைந்து அதிகமான உள்ளக் கவலை கொண்டு ஏங்குவார்கள். சூழ்நிலைகளுக்கு இவர்கள் காட்டும் சுறுசுறுப்பு மிகவும் உணர்ச்சி வசப்பட்டதாய் இருக்கும். மற்றவர்கள் இவர்களைச் சார்ந்து அளிக்கும் பொறுப்புக்களை அக்கறையுடனும் கடமையுடனும் நிறைவேற்றி பாராட்டுக்குரியவராவார்கள். ஆனாலும் அவர்கள் தரும் முறை மிகுந்த உள்ளக் களிப்போடு இல்லாவிடில் தொந்தரை கொள்வார்கள். இவர்கள் வழக்கத்திற்கு மாறாக, இவர்கள் விரும்பி ஏற்கும் காரியங்களை மனதார, மனப்பூர்வமாக செய்யும் நோக்கு இவர்களிடம் உள்ள தனிப்பட்ட விசேஷம். ஆனால் இவர்கள் உடலால் பலசாலிகள், உள்ளத்தால் பலஹீனர்கள். இவர்கள் பலஹீனம் உள்ளத்தால் இருப்பினும் இவர்களின் சக்தியில் நாளடைவில் குறை ஏற்பட்டதாய் நினைந்து அதனை சீர்படுத்த யத்தனித்துக் கொண்டேயிருப்பார்கள். இவர்களின் மேற்புறத்தோல் மற்றைய நபர்களைவிட விசித்திரமான மென்மைத் தன்மை உடையதாய் இருக்கும். உராய்வின் காரணத்தாலோ அல்லது ஒரு வகை எரிச்சலின் காரணத்தாலோ இவர்கள் வெளிவிடும் வியர்வையிலும் ஏதாவது மாற்றந்தெரியும். ஜீரண உறுப்புக்களின்கோளாறினால் ஏற்படும் முகப்பருக்கள், கட்டிகள், இரத்தக் கொப்பளங்கள், உடல் அரிப்பு, தோல் நமைச்சல், எரிச்சல் போன்ற சில்லரை வியாதிகள் நிச்சயமாகத் தோன்றி தொந்தரவு கொடுக்கும்.

### முக்யமான தோற்றங்கள்

இவர்களின் 7,16,25,34,43,52, 61-ம் வருடங்களில் ஜனவரி, பிப்ரவரி, ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் உடற் சம்பந்தமாய் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நேரிடலாம்.

### எச்சரிக்கை

வீணான கவலைகளினாலும், காரியம் தடுமாற்றமாய் செல்கிறதே என்ற ஏக்கத்தினாலும் ஏற்படும் உள்ளக் குமுறலை அறவே ஒழித்தல் அவசியம். இவர்கள் தங்கள் அன்றாட நிகழ்ச்சிகளின் நடுவே ஓய்வு எடுத்துக் கொள்ளுதல் மிக மிக அவசியம். மேற்புறத் தோலை நன்கு பரிபாலிக்க வேண்டும். மலச்சிக்கலுக்கு வழி வகுக்காது குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே ஆகாரம் கொள்ள வேண்டும்.

### முக்யமான இயற்கை வைத்யம்

முட்டைகோஸ், வெள்ளரிக்காய், ஆப்பிள், மற்றும் கீரை வகைகளை அடிக்கடி உணவுடன் குறிப்பிட்ட அளவு சேர்த்துக்கொள்ளல் அவசியம். அன்றாட உணவு உட்கொண்ட பின்னர் வகை வகையான பழச்சாறுகளை வெவ்வேறு நாட்களில் உட்கொள்ளலாம். ஓய்வுக்கு தினசரி நான்கு மணி நேரமாவது ஒதுக்க வேண்டும். எந்த ஒரு செயலையும் பதட்டமில்லாது செய்தல் நன்று.

### முக்யமான நபர்கள்

இராணி எலிசபெத், 14-ம் லூயி, சார்லஸ் டிக்கன்ஸ், ஆஸ்கார் வைல்டு, இராபர்ட் பிரௌனிங், ரூஸோ, கவி வோட்ஸ் வொர்த், விஞ்ஞான மேதை நியூட்டன்.

(தொடரும்)

# அனுமன் கதை

திரு. மா. சீதாராமன், M.A., BEd.,
பெருங்கட்டூர்.

## 22. எல்லாம் மொழிந்தான்!

அன்பினால் என்னை நின்பால் ஆழி
யும் காட்டி ஆன்ற
துன்பெலாம் துடைத்தி யென்று
துரந்தனன் தோன்றல் என்று
முன்பினால் இயன்ற எல்லாம் மொழிந்
தனன் முதுநீர் தாவி
அன்பினால் இலங்கை முற்றும் எரிக்
குண வாக வைத்தோன்!

*(302, மீட்சிப் படலம், யுத்த காண்டம்.)*

அனுமன் பிராட்டியாரிடம் இராவணன் இறந்த மங்களச் செய்தியைப் பலபட விரித்துக் கூறலானான் :

''அன்னையே! நினக்கு மங்களம் உண்டாவதாக! தீக்குணங்கட்கு இருப்பிடமான இராவணனை இராமபிரானுகிய பட்டத்து யானை தன் காலினால் மிதித்துக் கொன்றுவிட்டது. எனவே, நினக்கு மங்களம் உண்டாவதாக. மலைகள் கீழே விழுந்து கிடத்தலைப் போல, அந்த இராவணனுடைய பத்துத் தலைகளும் தரையில் வீழ்ந்து கிடந்தன. கடலலைகளைப் போல, அவனுடைய இருபது தோள்களும் கீழே விழுந்து புரண்டன. அவனுடைய மலை போன்ற உடல் தரையிலே வீழ்ந்து அசைவின்றிக் கிடந்தது. விபீடணன் தக்க நேரங்களில் செய்த பலவகை உதவிகளாலும், இராமபிரானது சங்கல்பத்தினாலும் இலங்கையில் அரக்க வீரர் அனைவரும் மாண்டொழிந்து மகளிர் மட்டுமே உயிர் பிழைத்துள்ளனர்.''

இச்செய்தியைக் கேட்ட அளவில் பிராட்டியின் அங்கமெல்லாம் பூரிப்படைந்தது. உடலும் உள்ளமும் ஒருங்கே பூரிக்கப் பெற்ற பிராட்டியார் மகிழ்ச்சி மிகுதியால் ஒன்றும் பேசமாட்டாது சற்று நேரம் வாளா விருந்தார். இது கண்ட அனுமான் பிராட்டியை நோக்கி, ''அன்னையே! தாங்கள் ஒன்றும் பேசாமல் இருப்பதன் உண்மை எனக்குப் புலப்படவில்லையே! மகிழ்ச்சி மிகுதியால் ஒன்றும் தோன்றாமல் இருக்கின்றீரா? 'என் வார்த்தை பொய்யாக இருக்கக் கூடுமோ?' என ஐயுற்று அசைவற்று நிற்கின்றீரா? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!'' எனக் கூறிப் பிராட்டியைத் தொழுது நின்றான்.

தன்னை வணங்கி நின்ற அனுமனை நோக்கிப் பிராட்டியார் கூறுகின்றார்.

''ஐயனே! களிப்பு மிகுதியால் என்ன பேசுவது என்றே எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. எனவே, வாயடைத்துச் செயலற்று நின்றுவிட்டேன். முன்பு, தூதனாக வந்த நீ என்னைச் சிறையிலிருந்து விடுவிப்பதாக உறுதி கூறிவிட்டுச் சென்றாய். அவ்வாறே என்னைச் சிறையிலிருந்தும் நீக்க உதவி புரிந்தாய். என்னைச் சிறையில் வைத்த இராவணனையும் தொலைப்பதற்கு உதவி புரிந்தாய். இராவணன் இறந்த மங்களச் செய்தியையும் வந்து கூறினாய், இப்படிப்பட்ட பேருபகாரத்தைச் செய்த உனக்குக் கைம்மாறாக நான் என்ன செய்வேன்! உன் உதவிக்கு ஏற்ப உனக்கு ஒன்றும் செய்ய இயலவில்லையே என்ற சிந்தனையாலேயே நான் ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டேன். நீ எனக்குச் செய்த உதவிக்கு இம்மூன்று உலகங்களையும் கொடுத்தாலும் ஈடாகுமா? அழியக் கூடிய இம்மூவுலகினையுமா உனக்குக் கொடுப்பது? உனக்கு நான் தலை வணங்குதலே உனக்குச் செய்யக் கூடிய கைம்மாறாகக் கருதுகிறேன். தூதரிற் சிறந்தவனே! இனி நான் செய்ய வேண்டுவது யாது என்பதை நீயே கூறுவாயாக!''

இலக்குமியின் திரு அவதாரமாகிய பிராட்டியே தலை வணங்கும் பேறு



அனுமனுக்குக் கிடைத்தது. இப்பேறு வேறு யாருக்குக் கிடைக்கும்? மனமுருகி நன்றி செலுத்திய பிராட்டியை நோக்கி அனுமன் கூறலானான்:

''எமது தலைவியே! நீங்கள் இப்பொழுது அடைந்துள்ள மனக்களிப்புக்குப் பொருத்தமாக உம்மை எம் தலைவனாகிய இராமபிரானிடத்தில் சேர்க்க எனக்கு அனுமதி அளித்தலே என் அடிமைத் தொழிலுக்குத் தாங்கள் அளிக்கக் கூடிய நல்வரமாகும். தாயே! மற்றோர் வரமும் வேண்டுகிறேன். களங்கமற்ற திரிசடையைத் தவிர மற்றைய அரக்க மகளிரையெல்லாம் நான் உடனே கொன்றொழிக்க வரம் தருதல் வேண்டும். கடுஞ்சொற்களால் தங்களைச் சுட்ட இவ்வரக்கியரை என் கூரிய நகங்களால் கிழித்து எறிதல் வேண்டும்!''

இவ்வாறு அனுமன் பிராட்டியிடம் வரம் வேண்டி நின்றபொழுது, அச்சத் தரல் அரக்கியர் அன்னையின் திருவடிகளைப் பற்றிக் கொண்டு அடைக்கலம் வேண்டி நின்றனர்.

''அஞ்சற்க!'' எனப் பிராட்டியார் அரக்கியர்க்கு அடைக்கலம் தந்தனர். உலக மாதாவான சீதாபிராட்டியார் அனுமனை நோக்கிக் கூறலானார்:

''தூய குணமுடையோனே! இவ்வரக்கியர் தம் தலைவனை இராவணனது கட்டளைக்குக் கட்டுப் பட்டு என்னைக் கடுஞ்சொற்களால் மனம் நோகச் செய்தனரேயன்றி, இவர்களாகவே மனம் விரும்பி எனக்குத் தீங்கு ஏதும் செய்யவில்லை. தாயினும் தயவுடையவனே! நான் செய்த தீவினைப் பயனாலேயே இத்துன்பம் எனக்கு நேர்ந்தது. கூனிபோலக் கொடு மனம் படைத்தவர்களல்லர் இவ்வரக்கியர்! எனவே, நடந்ததை மறந்துவிடு. இவ்வரக்கியர்க்குத் துன்பம் செய்ய மாட்டேன் என்ற வரத்தினை எனக்குக் கொடுப்பாயாக!''

அன்னையைச் சரணடைந்தால் கொடியவரும் உய்வுபெறலாம் என்பதை அனுமன் இதன் மூலம் உலகுக்கு உணர்த்தி நின்றான். சீதையின் திருவருளை எண்ணி அனுமன் வியந்தான்.

இதற்கிடையில், சீதையைக் கொணருமாறு இராமபிரான் விபீடணனுக்குக் கட்டளையிட்டார். விபீடணன் பிராட்டியை அழைத்துக் கொண்டு வரும்போது பிராட்டியார் போர்க்களத்தைக் கண்டார். அப்போது அன்னையார்க்கு அனுமன் நினைவு வந்தது.

''என் கற்பு நெறியினை என் தலைவனுகிய இராமபிரானிடம் எடுத்துக் கூறினன். என் தலைவியின் ஆற்றலையும் உலகுக்கு உணர்த்தினன். என் குடிப்பெருமையினையும் யாவர்க்கும் விளக்கினன். இவ்வுலகையும் அழிவிலிருந்து காப்பாற்றினன். இத்தகைய அனுமனுக்குச் சிரஞ்சீவித் தன்மையை என் கற்பு தவருமல் கொடுத்தே தீரும்!'' இவ்வாறு பிராட்டியார் அனுமனை வாழ்த்திக் கொண்டே சென்றார். பிராட்டியார் இராமபிரானை அடைந்தார். இராமபிரான் பிராட்டியை அக்கினிப் பிரவேசம் செய்வித்தார். பின் பிராட்டியைப் புட்பக விமானத்திலேற்றிக் கொண்டு அயோத்தி நோக்கிச் செல்லலானார். செல்லும் வழியில் பிராட்டியார்க்குச் சுக்ரீவன் நாட்டினை இராமபிரான் காட்டினர். பிராட்டியார் வானர மகளிரையும் உடனழைத்துச் செல்ல விரும்பினர். சுக்ரீவன் கட்டளைப்படி அனுமன் வானர மகளிரை அழைத்து வந்து சேர்த்தான். பின், அனைவரும் பரத்துவாச முனிவரது ஆசிரமத்தை அடைந்து மகிழ்ந்திருந்தனர். அப்போது இராமபிரான் அனுமனை நோக்கிக் கூறலானர்:

''அனுமனே! நாம் அயோத்தி சென்று சேர்வதற்கு முன்பாகவே பரதனிருக்கும் நந்தி கிராமத்திற்குச் சென்று நம் நலத்தைக் கூறுவாயாக. அவன் மனத்திலிருக்கும் பயமாகிய தீயை அணைப்பாயாக. அவன் மேற்கொண்டிருக்கும் ஒழுக்கத்தையும் எண்ணத்தையும் ஆராய்ந்தறிந்து எம்மிடம் சொல்லுதல் நல்லது. அடையாளமாக என் மோதிரத்தையும் கொண்டு செல்வாயாக!''

இவ்வாறு இயம்பிய இராமபிரான் தன் மோதிரத்தைக் கழற்றி அனுமனிடம் கொடுத்தார். அனுமன் அதனைப் பெற்றுக் கொண்டு, காற்றினும் கடிது சென்றான். வழியில் குகனைக் கண்டு இராமபிரான் நலத்தைக் கூறினன். பின், வான் வழியே பரதனிருப்பிடம் நோக்கிச் செல்லலானன்.

இதற்கிடையில், இரமபிரான் வராமையினல் பரதன் தீமூட்டி அதில் உயிர்விடத் துணிந்தான். அன்னையர் மூவரும் பரதனைத் தடுத்தனர். எனினும், பரதன் அவர்கள் சொல்லைக் கேட்காமல் தீயில் விழுந்து உயிர்விடத்

சிவன்-பார்வதி திருமணத்தைச் சித்தரிக்கும் வண்ணச் சித்திரம்-பிரம்மன் கோயில்-காளஹஸ்தி, திரு. எஸ். வி. கே. எஸ். ஸ்ரீநிவாசன்-திருப்பதி.



தீயை வலம் வரலானுன். அப்போது மலைபோன்ற வடிவத்தையுடைய அனுமன் அங்கே வந்து சேர்ந்தான். இராமபிரான் வருகையைப் பரதனுக்கு எடுத்துக் கூறலானுன்.

''என் தலைவனுகிய இராமபிரான் வந்தான்! சான்றோன் வந்தான்! சத்தியம் தவருத உத்தமன் வந்தான்! உன் உயிர் பிரிந்தால் எம் தலைவனுகிய இராமபிரான் உயிர் வாழ்வானே?'' என்று உரைத்துக் கொண்டே பரதன் மூட்டிய தீயை அனுமன் தன் கையினுல் அவித்தான். அத்தீயை அணைத்தபின், தாமரை மலர்போன்ற அந்தப் பரதனுடைய திருவடிகளைத் தன் தலையால் வணங்கினுன். வாய் பொத்தி அடக்கத்துடன் நின்ற அனுமன் தன் வார்த்தைகளைத் தவருமல் ஏற்க வேண்டும் என்று பரதனிடம் வேண்டிக் கொண்டான். ''ஐயனே! எம் தலைவர் உம்மிடம் வந்து சேர்வதாகக் கூறிய நாள் முடிவதற்கு இன்னும் நாற்பது நாழிகை உள்ளது. நான் சொல்லுவது முற்றிலும் உண்மை. என் சொல் பொய்க்குமானுல், இத்தீயில் நானே முன்னம் வீழ்ந்து இறப்பேன்! சத்தியம் தவருதவனே! சூரியன் கீழ்த்திசையில் தோன்றும் காலம் வரையில் பொறுப்பாயாக. அதற்குள் இராமபிரான் வராவிட்டால் நீயும் உலகமும் அழிந்துபோவது பற்றி நான் ஒன்றும் தடை செய்யமாட்டேன். பரத்துவாச முனிவர் தம் ஆசிரமத்தில் தங்கி விருந்துண்டு போகும்படி வேண்டிக் கொண்டதனுல் இராமபிரான் அங்கே தங்கியுள்ளார். உன்னைக் காணத்துடித்துக் கொண்டிருக்கும் அவர் காரணமின்றி இடைவழியில் தங்குவாரா? தேவர் பிரானுகிய இராமபிரான் கருணையுள்ளங் கொண்டு என்னிடம் கொடுத்தனுப்பியுள்ள அடையாளமும் ஒன்றுண்டு. உனக்குக் காட்டவே அதைக்கொண்டு வந்துள்ளேன். காண்பாயாக!''

இவ்வாறு கூறிக்கொண்டே தன் கையிலிருந்த மோதிரத்தை அனுமன் பரதனுக்குக் காண்பித்தான். அனுமன் காட்டிய மோதிரத்தைக் கண்ட அளவில் அங்குக் கூடியிருந்தோரின் உள்ளங்கள் உவகையால் குளிர்ச்சியடைந்தன. மகிழ்ச்சியால் பரதன் ஆடிப் பாடினுன். தன் கைகளைக் கூப்பி அனுமனை வணங்கினுன். வேதியர் வடிவத்துடன் வந்து அக்கினியை அவித்த அனுமனின் வரலாற்றைக் கூறுமாறு பரதன் வேண்டிக் கொண்டான். பரதனுக்கு அனுமன் தன் வரலாறு கூறுகின்றுன்.

''அரசனே! நான் ஒரு குரங்கு: என் தந்தை வாயுபகவான். வானர சாதியில் மகப்பேறு வேண்டித் தவம் செய்தவளாகிய அஞ்சனுதேவியின் வயிற்றில் வந்து பிறந்தவன். உமது அண்ணுவான இராமபிரானுக்கு அடிமைத் தொழில் செய்யும் பேறு பெற்றவன். என் இயற்கையான குரங்கு வடிவத்தை மாற்றி உம் எதிரில் அந்தண வடிவோடு நிற்கிறேன். அடிமைத் தொழில் செய்யும் என் அற்பமான சரீரத்தை உமது தாமரை மலர் போன்ற கண்களால் காண வேண்டுகின்றேன்!''

தேவர்களாலும் காண முடியாத அளவுக்கு அனுமன் வானளாவ வளர்ந்து பெருவடிவு கொண்டான். இவ்வடிவு கண்டு பரத சத்துருக்கரும், வசிட்ட முனிவர் முதலானேரும் பெருவியப்புக் கொண்டனர். அங்குள்ளாரெல்லாம் அச்சங்கொண்டு நின்றனர். தன் வடிவத்தைச் சுருக்கிக் கொள்ளுமாறு அனுமனை பரதன் வேண்டிக் கொண்டான். தன் சரீரத்தைச் சுருக்கிக் கொண்டு தன்னை வணங்கியும் நின்ற அனுமனுக்குப் பரதன் பல்வகையான அணிகலன்களையும் செல்வங்கள் பலவற்றையும் பரிசாகக் கொடுத்தான். இதற்கிடையில் அயோத்தியை அலங்கரிக்குமாறு பரதன் தன் தம்பிக்குக் கட்டளையிட்டான். பின்னர், இராமபிரானின் கானக வரலாறு முழுவதையும் கூறுமாறு பரதன் அனுமனை வேண்டிக் கொண்டான். அனுமன் பரதனை வணங்கிக் கூறலான்: ''மணம் மிக்க மலர் மாலையணிந்தவனே! எம்தலைவரான இராமபிரான் அயோத்தியில் வாழ்ந்ததும், மிதிலை சென்று திருமணம் செய்து கொண்டதும் உங்கள் அனைவருக்கும் தெரிந்ததே! இராமபிரான் சித்திர கூட பருவதத்தை விட்டு நீங்கியது முதல், இராவணனை அழித்துத் தங்களைக் காண என்னை இங்கே அனுப்பியது வரையிலும் நடந்த கதையைக் கூறுகிறேன்.

சித்திர கூடமலையை விட்டுச்சென்ற இராமபிரான் விராதன் என்னும் கொடிய அரக்கனைக் கொன்று, பின் முனிவர்கள் பலர் வாழும் தண்டகாரணியத்தையடைந்தார். அத் தண்டகாரணிய இருடியர் தங்கட்குத் தீமை விளைக்கும் அரக்கர்களை அழிக்கும் பணியை மேற்கொள்ள வேண்டிக் கொண்டனர். இராமபிரானும் அவர்கள் வேண்டுகோளை நிறைவேற்று

---

ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் கருடசேவை-நாராயணவனம்.



வதாக உறுதி கூறினான். பத்து ஆண்டுக் காலம் அத்தண்டகாரணியத்திலேயே தங்கியிருந்தார். பின்னர், இருடியர்களின் வேண்டுகோளின்படி என்று முளதென்றமிழ் இயம்பிய அகத்திய மாமுனிவரின் இருப்பிடஞ் சேர்ந்தார். அகத்தியர் இராமபிரானை அன்புடன் தழுவி வரவேற்றார். வில்லையும், இரண்டு அம்புப் புட்டில்களையும், கவசத்தையும், ஒப்பற்றவாள் ஒன்றினையும் கொடுத்து வாழ்த்தி அனுப்பி வைத்தார்.

அதன்பின் எம்பிராட்டியும், தலைவரும், இளைய பெருமாளும் கழுகின் வேந்தனாகிய சடாயுவைக் கண்டு, பின் சோலைகள் அடர்ந்த பஞ்சவடி வந்து சேர்ந்தனர். அப்பஞ்சவடியில் பல நாள் இன்புற்றிருந்தனர். ஓர் நாள் சூர்ப்பநகை என்பாள் அங்கே வந்து இராகவர் மேல் காமுற்றாள். பிராட்டி தன் காதலுக்கு இடையூறாக இருப்பதாக உணர்ந்து பிராட்டியைக் கவர்ந்து செல்லச் சூர்ப்பநகை முற்பட்டாள். அப்போது இளைய பெருமாள் அங்கே தோன்றிச் சூர்ப்பநகையின் மூக்கு முதலான உறுப்புக்களை அரிந்து அவளை அப்புறப்படுத்தினார். இதனால் சினமுற்ற சூர்ப்பநகை கரதூடணர்களையும், திரிசிரனையும் உதவிக்கு அழைத்து வந்தாள். இராம பாணம் அம்மூவரையும் கொன்றொழித்தது. பின், சூர்ப்பநகை தன் அண்ணனான இராவணனிடம் சென்று தனக்கு நேர்ந்த 'மானபங்கத்தையும், கரதூடணர் மாண்டு போனதையும், பிராட்டியின் வடிவழகையும் எடுத்துக் கூறினாள். காமமும் கோபமும் ஒருங்கே கொண்ட இராவணன் பஞ்சவடி சென்று, மாரீசனை மாயமானாக்கிச் சீதையை வஞ்சனையால் கவர்ந்து வந்தான். அவ்வாறு கவர்ந்து செல்லும் போது, வழியில் தன்னை எதிர்த்த சடாயுவை இராவணன் போரிட்டுக் கொன்றான். பின், அசோக வனத்தில் சீதையைச் சிறை வைத்தான்.

இதற்கிடையில், இராமபிரான் மாயமான் பின் சென்று அதனைத் தன் அம்பால் வீழ்த்தினார். மாயமான் மாரீசனாகி உயிர்விட்டது. பின், இளைய பெருமாளுடன் இராமபிரான் சீதையைத் தேடிக் கொண்டு பல இடங்களிலும் அலைந்தார். வழியில் குற்றுயிராய்க் கிடந்த சடாயுவின் மூலம் பிராட்டியாரைப் பற்றிய செய்தியை இராகவர் அறிந்தார். பின்னர் உயிர் துறந்த சடாயுவுக்கு ஈமக்கடன் முடித்து, தெற்கு நோக்கிச் சீதையைத் தேடிக் கொண்டு செல்லுங் கால் கபந்தன் என்பானைக் கொன்று, அவன் சாபத்தையும் மாற்றித் தன்னையே தியானித்து வரும் சபரியினது உபசாரத்தையும் ஏற்றார்.

பின், சபரியின் யோசனைப்படி சுக்ரீவனோடு நட்பு கொண்டு, சுக்ரீவனுக்காக ஏழுமராமரங்களையும் தொளைத்து வாலியையும் வதஞ் செய்தார். மழைக் காலங்கழித்து சுக்ரீவன் எழுபது வெள்ளம் சேனைகளைத் திரட்டிக் கொண்டு வந்தான். அச்சேனைகள் நான்கு திக்கிலும் சென்று பிராட்டியைத் தேடும் பணியில் இறங்கின. அடியவனாகிய நான் தெற்கு நோக்கிச் சென்று இலங்கையில் பிராட்டியைத் கண்டு வந்து இராகவரிடம் கூறினேன். சீதையை மீட்கச் சுக்ரீவன் சேனை தென் கடலை அடைந்தது; அங்குத் தங்கியிருக்கையில், இராவணன் தம்பி விபீடணன் என்பான் இராமபிரானை அடைக்கலமாக அடைந்தான். பின்னர், சேதுபந்தனம் செய்து, கடலைத் தாண்டி இலங்கையை அடைந்து சேனைகள் முற்றுகையிட்டன.

கைலையைப் பெயர்த்தெடுத்த இராவணனது இருபது தோள்களையும், மதங்கொண்ட மார்பினையும், பத்துத் தலைகளையும் தன் வில்லாற்றலால் இராமபிரான் அறுத்துத் தள்ளினார். கும்ப கருணனையும் கொன்றொழித்தார். இளைய பெருமாள் இராவணனுடைய ஒப்பற்ற மகனான இந்திரசித்துவையும், மற்றைய அரக்கர் கூட்டத்தையும் கொன்றொழித்தார். அரக்கர்கள் அழிந்ததால் தேவர், முனிவர், சித்தர் முதலானோர் இராகவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். இறந்தவர்கட்கு ஈமக்கடன்களைச் செய்யுமாறு இராமபிரான் விபீடணனுக்குக் கட்டளையிட்டார். பின்னர், இராகவர் பிராட்டியை அக்கினிப் பிரவேசம் செய்வித்து, அன்னையின் கற்பு நெறியினை அகில உலகத்துக்கும் எடுத்துக் காட்டினார்.

அப்போது, வாய்மைக்காக உயிர் துறந்த தசரத மன்னர் விமானமொன்றில் வான்மீது தோன்றினார். இராம இலக்குவரையும், பிராட்டியையும் தன் கைகளால் எடுத்து இறுகத் தழுவித் தன் கண்ணீரால் முழுகப் பண்ணினார். அப்போது இராகவர் தந்தையிடம் வரம் வேண்டினார். ''தந்தையே! என் தெய்வமாகிய கைகேயி அன்னையும் அவரது மகனான பரதனும் எனக்குத் தாயும் தம்பியும் ஆகும் வரம் அருள்க!'' எனக் கேட்ட இராகவருக்கு அவ்வரங்களைத் தந்து தந்தையார் வைகுந்தம் சென்றுவிட்டார். பின், விபீடணன் புட்பக விமானம் ஒன்றைக் கொண்டு வந்து நிறுத்தினான். அவ்விமானத்தில் வானர வீரரும், இராக்கத வீரரும் பிராட்டியும், இளைய பெருமாளும், சுக்ரீவனும் தன்னைச் சூழ இராகவர் ஏறியருளி அயோத்தி நோக்கி வந்து கொண்டிருந்தார். வழியில் பரத்துவாசர் வற்புறுத்துலுக்கிணங்க அங்கே தங்கியுள்ளார்.

உன்மீதுள்ள அன்பினால் என்னை விரைந்து சென்று உனக்குச் சேதி சொல்லுமாறு கட்டளையிட்டார். அவர் கட்டளையைச் சிரமேற்கொண்டு நான் தங்களிடம் வந்துள்ளேன்!''

இவ்வாறாக, அனுமன் இராமபிரானின் இடைக்கால வாழ்க்கையைப் பற்றிய செய்திகள் எல்லாவற்றையும் விளக்கமாகக் கூறினான்.

(தொடரும்)

# உயிரின் தோற்றம்

*(மரணம் ஆன்மாவின் முடிவு என்னும் கருத்தை ஏற்றுக்கொள்ள மனிதன் பொதுவாகத் தயங்குகிறான். ஏதோவொரு வடிவில் ஆன்மா மரணத்திற்குப் பிறகும் இருந்துவருவதாகவே அவன் கருதி வந்துள்ளான். உயிரின் உண்மையை உருக்கமாக விளக்கும் உயரிய உபநிஷதக் கதை, சுவேத கேது ஆருணேயரின் கதை.)*

பண்டைய இந்தியாவில் பாஞ்சாலம் என்னும் நாடு இந்தியப் பண்பாட்டின் முக்கியமானதொரு மையமாக விளங்கியது. ஒரு சமயம் அறிஞர்கள் பலர் அங்கு ஒன்று கூடி, தத்துவ விசாரம் செய்தனர். அப்போது சுவேத கேது ஆருணேயர் என்னும் அந்தண இளைஞர் அங்கே சென்றார். அவருடைய தந்தை கௌதமர், அந்தணருக்குத் தெரிந்திருக்க வேண்டியவை அனைத்தையும் அவருக்குக் கற்பித்திருந்தார்.

உள்ளே நுழைந்த சுவேத கேதுவை அரச வகுப்பைச் சேர்ந்த பிரவாஹணை ஜைவலி அணுகி 'குழந்தாய், நீ முறையாகக் கல்வி பெற்றிருக்கிறாயா?' என வினவினார்.

'ஆம். எனது தந்தையிடமே முறையாகக் கல்வி பயின்று முடித்திருக்கிறேன்' என்று சற்றே கர்வத்துடன் சுவேத கேது மறு மொழி பகர்ந்தார்.

'அவ்வாறாயின் ஒரு கேள்வி கேட்கிறேன். இறந்த பின் இங்கிருந்து மனிதர்கள் எந்த இடத்திற்குச் செல்கின்றனர் என்று உனக்குத்தெரியுமா?'

'இல்லை, ஐயா. எனக்குத் தெரியாது'.

'அவர்கள் எங்ஙனம் மீண்டும் இவ்வுலகிற்குத் திரும்பி வருகின்றனர் என்பது தெரியுமா?'

'இல்லை, ஐயா. எனக்குத் தெரியாது.'

'தேவயானம், பித்ருயானம் எனப்படும் இறந்தோர் செல்லும் பாதைகளைப்பற்றித் தெரியுமா?'

'இல்லை, ஐயா. எனக்குத் தெரியாது?'

'இங்கிருப்போர் பலர் இறந்து மறு உலகிற்குச் சென்று கொண்டே இருந்தாலும்கூட, அவ்வுலகு ஏன் நிரம்பி விடுவதில்லை என்பது தெரியுமா?'

'இல்லை, ஐயா. எனக்குத் தெரியாது.'

'வேள்வியில் ஐந்தாவது ஆகுதியின் போது திரவம் எவ்வாறு புருஷனாக அல்லது உயிருள்ள மனிதனாக ஆகின்றது என்பது தெரியுமா?'

'இல்லை, ஐயா. எனக்குத் தெரியாது.'

ஐந்து கேள்விகளுக்கும் விடை சொல்லாத சுவேத கேதுவிடம் பிரவாஹணர் 'தத்துவ விசாரத்தில் இவை மிகவும் முக்கியமானவை. இவற்றுள் ஒன்றுக்குக்கூட விடை தெரியாத நீ கல்வியை முறையாக முடித்துவிட்டிருப்பதாக ஏன் சொன்னாய்?' என்று கூறினார்.

சுவேத கேதுவிற்கு ஒரு புறம் அவமானம்; மறு புறம் ஏமாற்றம். அனைத்தையும் கற்பித்துவிட்டதாகத் தந்தை கூறியது எவ்வளவு தவறு என்பது புரிந்தது.

தந்தை கௌதமரிடம் வந்து, பாஞ்சாலம் சென்று வந்த விவரமனைத்தையும் தெரிவித்து 'ஐயா, எனக்கு எல்லாவற்றையும் சொல்லிக் கொடுத்துவிட்டதாகக் கூறினீர்களே. க்ஷத்திரியக் குலத்தைச் சேர்ந்த பிரவாஹணன் கேட்ட ஐந்து கேள்விகளுள் ஒன்றுக்கூட என்னால் விடை சொல்ல முடியவில்லை' என்று வருத்தத்துடன் சொன்னார்.

'அருமை மகனே, அக்கேள்விகளுக்கான விடை எனக்கும் தெரியாது. எனக்குத் தெரிந்திருந்தால் உனக்குச் சொல்லிக் கொடுக்காமல் இருந்திருப்பேனா?' என்று பிரவாஹணனிடமிருந்து, அவற்றுக்கான விடைகளைத் தெரிந்து கொள்வதற்காக, சுவேத கேதுவுடன் பாஞ்சாலம் சென்றார்.

கௌதமரைக் கண்ட பிரவாஹணன் அவரை வணங்கி வரவேற்று உபசரித்தார். அவர் வந்த நோக்கத்தை அறிந்து கொண்ட அரசர் கவலையுடன் கூறினார்: 'ஐயா, உங்களுக்கு ஏராளமான செல்வத்தை அளிக்கிறேன், பெற்றுக்கொள்வீர்.' ஆனால், கௌதமரோ 'எனக்குச் செல்வம் எதுவும் வேண்டாம். அதை நீயே வைத்துக் கொள். எனக்குத் தேவை அறிவு. எனது மகனிடம் நீ கேட்ட ஐந்து கேள்விகளுக்கான விடையை நீ சொல்ல வேண்டும். மறு உலகு பற்றிய விவரமறியத் துடிக்கிறேன்' என்று உறுதியுடன் மறு மொழி பகர்ந்தார்.

---

'ஆலம்'
திருப்பதி.

---

அந்தணப் பெருமகனாரின் ஆர்வத்தைக் கண்ட பிரவாஹணர் கூறினார்:

'இது வரை இந்த அறிவு அரச வகுப்பினரிடை மட்டுமே பரம்பரையாக இருந்து வந்துள்ளது. இப்போதுதான் முதன் முதலாக அந்தணராக உமக்கு இதைக் கூறுகிறேன்.

முதலில் ஐந்தாவது கேள்வியை எடுத்துக் கொள்ளலாம். வேள்வித் தீயின் உறுப்புகள் ஆறு: அவை தீ, விறகு, புகை, அனற் கொழுந்து, தணல், பொறிகள் என்பவையாகும். இவ் வேள்வித் தீயில் ஆகுதி செய்யும் போது அதிலிருந்து ஏதாவதொரு பொருள் தோன்றுகிறது.

ஐந்து வேள்விகள் உள்ளன; இவற்றின் விளைவாகவே மூல தத்துவப்

பொருள் இறுதியில் உயிர்ப் பொருளாக அல்லது மனிதனாக மாறுதல் அடைகிறது.

மறு உலகு என்பது தீ; சூரியன் விறகு; அதில் செய்யப்படும் ஆகுதி சிரத்தை அல்லது நம்பிக்கை. இச் சடங்கில் சிரத்தையின் அறிகுறியாக இருப்பது நீர். இவ்வேள்வியின் விளைவாகக் கிடைப்பது உயிர் தரும் சாறு ஆகிய ஸோமரசம். இந்த ஸோமரசம் மழைக்கு அதிதேவதையான பர்ஜன்யன் என்னும் தீயினில் ஆகுதி செய்யப்படும்போது மழை உண்டாகிறது. மழை பூமியின் மீது ஆகுதி செய்யப்படும்போது, அதாவது, பெய்யும் போதுஉணவு உற்பத்தியாகிறது. மனிதன் என்னும் தீயில் ஆகுதி செய்யப்படும்போது இவ்வுணவு செரிக்கப்பட்டு ரேதஸ் என்னும் ஜீவத்திரவமாக மாறுகிறது. பெண்ணின் உடலினுள் இந்த ஜீவத்திரவம் சேரும்போது கரு உண்டாகி, குழந்தை பிறக்கிறது, இவ்வாறுதான் மூல தத்துவப் பொருளான நீர் அல்லது சிரத்தை ஐந்து

**ஸ்ரீ தட்சிணாமூர்த்தி – ஸ்ரீகாளஹஸ்தி.**
**திரு. எஸ். வி. கே. எஸ். ஸ்ரீநிவாசன், திருப்பதி.**



நிலைகளில் படிப்படியாக உயிர்ப் பொருளாக மாற்றம் அடைகிறது. கரு ஜவ்வினால் மூடப்பட்டு, அதில் ஒன்பது அல்லது பத்து மாதம் கிடந்துவிட்டு, பிறகு பிறக்கின்றது.

இறக்கும்போதுகூட, ஆன்மா உடலிலிருந்து வெளிப்பட்டுச்செல்லும் போது அது சூக்குமமான நீர்ப்பொருளினால் மூடப்பட்டே செல்கிறது. இறந்தவுடன் மனிதனை, அவன் எந்தத் தீயினிடமிருந்து தோன்றினானோ, அதே தீயினிடம், அதாவது, சிதைத் தீயினிடமே சேர்த்துவிடுகின்றனர்.

பின்னர், பிரவாஹணர் பிற கேள்விகளுக்கான விடைகளையும் கௌதமருக்குத் தெரிவித்தார்: ' வாழ்வின் உண்மையின்பால் சிரத்தையுள்ளவர்கள் அல்லது இவ் வேள்வித் தீக்களின் மெய்யியல்பை அறிந்தவர்கள் மேன் மேலும் உயர்வு அடைந்து இருட்டிலிருந்து ஒளியினுள், அதாவது, ஆன்மவியல் வளர்ச்சியில் மேலான நிலைக்குச் செல்கின்றனர். மரணத்திற்குப் பிறகு மனிதனுடைய உடல் என்னவோ அதை ஆக்கியுள்ள மூலப் பொருள்களாக, மண், நீர், தீ, வளி என்னும் அடிப்படைப் பொருள்களாகப் பிரிவடைந்து விடுகின்றன. ஆனால், அவனுடைய ஆன்மாவின் நிலை அவனுடைய செய்கைகளையும் அவன் பெற்ற அறிவையும் சார்ந்துள்ளது. அவன் மெய்யான ஆன்மவியல் அறிவு அடைந்திருந்தால் அவன் தேவயானம் என்னும் ஒளிப்பாதை வழியாகச் சென்று, மீண்டும் இந்தப் புவிக்குத் திரும்புவதில்லை. அவனுடைய ஆன்மா இறவா நிலை எய்திவிடுகிறது.

வேள்விச் சடங்குகளின் மெய்யியல்பை அறியாது, ஆசைகளுக்குட்பட்டும் சுவர்க்க வாழ்வின்பால் நாட்டம் வைத்தும் நல்வினைகளைச் செய்வோர்களும் உள்ளனர். அவர்கள் அந்த நல்வினைகளின் காரணமாக, பித்ருயானம் அல்லது இருட்பாதை வழியாகச் சுவர்க்கத்திற்குச் சென்று, தங்கள் புண்ணியம் அல்லது நற்பயன் முடியும் வரை அங்கு தங்கி, நல்லனவற்றை எல்லாம் சுவைத்துவிட்டு, தங்களுடைய முந்தைய செயல்களுக்கேற்ப நல்ல கர்ப்பத்தையடைந்து பிறப்பு எடுக்கின்றனர்.

தேவயானத்திற்கும் பித்ருயானத்திற்கும் உள்ள வேறுபாடு வாழ்க்கைப் பண்பாட்டு முறைகள் அவரவர்களிடத்தில் வெவ்வேறாக இருப்பது தான். பிறப்பு-இறப்புச் சுழல், விடுதலை- தளைச் சுழல் ஆகியவற்றை நாம் அநுபவித்தே ஆகவேண்டும். தேவையான முறையைப் பின்பற்றுவோர் சற்றே உயரிய நிலையிலுள்ள விடுதலை-தளைச் சுழலுக்கு உட்படுகின்றனர். பித்ருயான முறையில் செல்லுவோர் அதைவிடத் தாழ்ந்த அல்லது கீழான நிலையான பிறப்பு-இறப்புச் சுழலுக்கு ஆளாகின்றனர்.

மாறாக, பாவச் செயல்கள் புரிந்து கொண்டு தீய வாழ்வு வாழ்பவர்கள், அதாவது, வெறுக்கத்தக்க கொலை, களவு, கள், காமம் போன்ற தீச் செயல்கள் புரிபவர்கள் நாய், பன்றி, புழு, பூச்சி போன்ற அற்பப் பிராணிகளாகப் பிறப்பெடுத்துக் கொண்டு துயருறுகின்றனர்.

ஆக, பூமியின்மீது பிறப்பவர்களுள் சிலர் மேலான அறிவு பெற்று, பிரம்மலோகத்தை அடைகின்றனர். அங்கிருந்து அவர்கள் இங்கே திரும்புவதில்லை. மற்றும் சிலரோ சுவர்க்கம் சென்று, சிறிது காலம் அங்கு இருந்துவிட்டுப் பிறகு திரும்புகின்றனர். ஆனால், பெரும்பாலானவர்கள் முடிவேயில்லாத பிறப்பு-இறப்புச் சுழலில் சிக்கி உழல்கின்றனர். எனவேதான், நாள்தோறும் மக்கள் இப்பூமியிலிருந்து மரணமடைந்து மறு உலகிற்குச் சென்று கொண்டிருந்தாலும் மறு உலகு ஒரு போதும் நிறைந்து நிரம்பி விடுவதில்லை. உயிர், அதன் தோற்றம், மரணத்திற்குப்பின் ஆன்மாவின் நிலை ஆகியவைபற்றிய சிறந்த அறிவு இதுவேயாகும்.'

பிரவாஹணர் கூறியதன் முழுப் பொருளையும் உணர்ந்து கொண்ட கௌதமரும் அவர் மகன் சுவேதகேதுவும் ஐயங்கள் நீங்கித் தெளிவு பெற்றனர். 

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

உள்ளும் புறமும் மீன்கள், ஆமைகள் அன்னங்கள் ஸஞ்சரிக்கின்றன. நீயும் தான் இவ்வுலகை வாழ வைக்க ஸ்ரீநிவாஸன் திருவுள்ளத்தைத் தூண்டி அவனால் ஹம்ஸ, மத்ஸ்ய, கமடாதி அவதாரங்களைச் செய்வித்தாய் (ப்ரகடிதஹம்ஸ மத்ஸ்ய கமடாத்யவதார சதா).

தேவகங்கையை நிகர்ப்பது மட்டுமின்றி அவளைவிட மிக பவித்திரமாக விளங்கும் நீ, எம்பெருமான் திருவடியில் தோன்றி வீழும் அவளைப் போலன்றி என்றுமே அவன் திருவடியில் திகழ்கின்றாய் என்று போற்றுகின்றார்.

''நிகம ஸமாச்ரிதா நிகில லோக
ஸம்ருத்தி கரீ
பஜதகஜூல முத்ருஜ கதிः பரிதப்த
ஹிதா
ப்ரகடித ஹம்ஸ மத்ஸ்ய கமடாத்ய
வதார சதா
விபுத ஸரிச்ச்ரியம் வ்ருஷகிரீச தயே
வஹஸி (55)

தயை என்பது பொதுவான குணமே. மிருகங்கள், மனிதர்கள், தேவர்கள் எல்லோரிடமும் இவ் அருமையான நற்குணம் ஒரு சிறிதாவது, எப்பொழுதாவது தோன்றாமலிருப்பதில்லை. ப்ரும்மா முதல் புழுக்கள் வரை, தங்கள் உள்ளங்களில் தயை பிறக்கும்போது பிறர்க்கு உதவவும் செய்கிறார்கள். ஏழைகள்பால் தயை காட்டும் செல்வந்தர் தங்களால் இயன்றதை உதவுகிறார்கள். யாகயக்ஞங்கள் செய்து தேவர்களின் தயவைப் பெற்று செல்வம், நீண்ட ஆயுள் முதலிய பல நன்மைகளைப் பெறலாம். படைப்புக் கடவுளான ப்ரும்மா மகிழ்ந்து பலருக்கும் பலப் பல வரங்களை யெல்லாம் தரலாம்.

இப்படிப் பொதுவாக எல்லோரிடமும் காணும் தயைக்கும் திருவேங்கடவன்பால் தோன்றும் தயைக்கும் என்ன வித்தியாசம்?

மற்ற தயை எல்லாம் அவர்களிடத்தில் எப்பொழுதோதான் தோன்றும். அப்படித் தோன்றி அளிக்கும்நன்மைகளெல்லாம் ஓர் அளவுக்கு உட்பட்டவை. நிரந்தரமானதன்று. அதனை நம்பவும் முடியாது.

ஏன்?

அந்த தயை பிறக்கும் அவர்களுடைய ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் யாவும் ஓர் அளவுக்குட்பட்டவைகளே. இவர்கள் கருணையே சிலநேரங்களில் கோபமாகத் தோன்றி இன்னல்களை விளைவிக்கக் கூடும்.

இதையுணர்ந்தே மக்களும் தேவர்களும் உன்னை நாடுகின்றனர். மேலே சொன்ன ஷாட்குண்ய பரிபூரணனை வேங்கடவனுடன் நீ இருப்பதால் என்றும் அழிவில்லாத ஞான பல ஐச்வர்யாதிகளை உன்னை நாடுபவர்க்கு வாரி வழங்குகின்றான். ஏன்? என்றும் சாச்வதமாய், சாந்தியூட்டும் அப்பரமநிதியான பரமபுருஷன் ஸ்ரீனிவாஸனையே கூட அவர்களுக்கு அளித்து விட வல்லவள் நீ.

''தயா தேவியே! பலரிடம் காணும் தயை, அற்பமானதும், நிலையற்றதும், பலனளிப்பதில் நிச்சயமற்றதாய், மறுபடியும் துன்பம் விளைவிக்கக் காரணமான தயைகளாக ஆகிவிடுகின்றன. (தயே! ஜகதி தவத் இதரான், மிதம்பசா, தரளா, பல நியம உஜ்ஜிதா, புந: ஸந்தபநாய பவதி) நீயோ குறைவில்லா கோவிந்தனை திருமலை நாதனையே அவர்களுக்கு அளித்துவிடுகிறாய். (த்வம் நிரங்குச ப்ரசகனுதிவிபூதிமதீ. இஹ தேஹிநாம் நிரவதிம் வ்ருஷசைல நிதிம் விதரஸி)

''ஜகதி மிதம்பசா த்வதிதரா து தயே!
தரளா
பலநியமோஜ்ஜிதா பவதி ஸந்த
பநாய புநः
த்வமிஹ நிரங்குச ப்ரசகநாதி
விபூதிமதீ
விதரஸி தேஹிநாம் நிரவதிம்
வ்ருஷசைல நிதிம் '' (56)

ஸ்ரீ பதமாவதி அம்மையார் கோயில் வசந்தோற்சவத்தின்போது வெள்ளிரதம்–திருச்சானூர்.



முன்பு ஒரு கவிதையில் இக்கவிஞன் கண்ணன் அழகில் ஈடுபட்டான். இவன் உள்ளத்தில் ''காதல் நோய்ப் பட்ட இடைப்பெண்களின் முகமாகிய தாமரை மலர்களை மலரவைக்கும் சூரியனை கண்ணன் அழகிய மயில் தோகைகள் அசைய தன் மனத்தே திதழக் கண்டு வியந்தான் (ஹ்ருதி முக்த சிகண்டமண்டந: மதனாதுரவல்ல வரங்கநாநாம் வதநாம் போஜ திவா கரோயுவா மமஹ்ருதி) '' இதனை எந்தச் சிற்பி என் உள்ளத்திரையில் எழுதினானோ? (லிகித: கேந சில்பிநா?) என்ற கேள்வியை எழுப்பினான் (கோபாலவிம்சதி 14-ம் ஸ்லோகம்)

பின்பு தன் ஆசார்யரான ராமானுஜரைத் துதிக்கும் ''யதிராஜஸம்ததி'' என்னும் கவிதையில் 24-ம் ஸ்லோகத்தில் அந்த ஆசார்யருடைய வலக்கையின் ஜ்ஞான முத்திரையை சேவிக்குங்கால் '' தாமரை போன்ற அத்திருக் கையால் உயர்ந்த தத்வ ஜ்ஞான மென்னும் அழகிய சித்திரத்தை என்னுள்ளத்தே வளர்க்கின்றார் போலும் '' என்று பேசுகின்றார்.

''விஜ்ஞான சித்ரமநகம்லிகதி வசித்தே
வ்யாக்யாந கேளி ரஸிகேன கராம் புஜேன ||''

ஈண்டு 59-ம் ஸ்லோகத்தில் '' ஹே தயையே! உனது நாதன், விசித்திரமான சார சரங்கள் நிரம்பிய இந்த பிரபஞ்சமும், இது போன்று ஏனைய பல பிரபஞ்சங்களையும் படைக்க வல்ல உன்னதச் சிற்பி! மஹாதாசார்யர்கள் மனத்திரையில் அவன் என்றும் அழியாத உயர்ந்த தத்வார்த்தங்களைத் தீட்டுகின்றான்.

ஏன் தீட்டுகின்றான்?

அவன் கையில் நீ ஒரு தூல்கையாய் சித்திரக் கோலாய்) விளங்குகின்றாய்.

என்ன சித்திரம் வரைகின்றான் ?

''நான் வகுத்த கர்ம ஞான பக்தி மார்கங்களைத் தெளியாமலும், தெளிந்தாலும் கடைப்பிடிக்க முடியாமலும் திகைக்கும் மக்களே! என் ஒருவனையே உபாயம் என்று பற்றுங்கள். உங்கள் பாபங்களைப் போக்கி மோக்ஷம் வரையில் எல்லாத் தேவைகளையும் அளிக்கின்றேன்''.

''அதெப்படி முடியும்? பாப புண்ணியங்களை அநுபவித்தே தீர வேண்டுமென்று சொல்கிறார்களே?

''இதோ என் கையில் உள்ள தயா தேவியைக் காணுங்கள். இவன் என்னிடம் இருக்கும் வரை நீங்கள் பயப்பட வேண்டாம். நான் ஸ்வதந்திரன். இதற்காகவே ''என்னைச் சரணடைபவர்களை நான் எவ்வாற்றானும் காப்பாற்றுவேன்'' என்று ராமனாகவும் கிருஷ்ணனாகவும் நான் பிறந்து சபதம் செய்ததை மறந்துவிட்டீர்களா?''

இப்படி ஒரு தத்துவச் சித்திரத்தை யதிபதி, யாமுனாச்சார்யா போன்ற ஆசார்ய மஹான்கள் உள்ளத்தெழுதி, ப்ரபத்தி என்ற மார்க்கத்தை உலகினுக்கு உபதேசிக்கவைத்தான்.

இதற்கெல்லாம் காரணம் அவன் கருணையாகிய தயா தேவியேதான்!

''த்வதுதய தூலிகாபிரமுநா வ்ருஷ சைல ஜுஷா
ஸ்த்திர சர சில்பிநைவ பரிகல்பித சித்ர தியஃ
யதிபதி யாமுந ப்ரப்ருதயஃ ப்ரதயந்தி தயே
ஜகதி ஹிதம் ந ந ஸ்த்வயி பரந்ய ஸநாததிகம் '' (59)

இப்படிப்பட்ட எம்பெருமான் கருணையாகிய தயா தேவியின் குணாதிசயங்களைப் புகழ்ந்து தன்னுடைய ஸம்ஸார பந்தம் நீங்கி தானும் மோக்ஷமடைய அவனருள் அலையைத் தன் மேல் வீசவேண்டி இப்பதிகத்தை முடிக்கின்றார் நிகமாந்த மஹா தேசிகன்.

''மென்மையான இதயம் படைத்தவளே! (ம்ருது ஹ்ருதயே)
''தேவர்களையும் காப்பாற்றுபவளே! (த்ருத விபுதே)
''ஆன்ம ரக்ஷணப் பொறுப்பை அளிப்பவளே! (விதத ஆத்மதுரே)
''திருவேங்கடநாதனுக்கு இன்பமானவளே!
(வ்ருஷகிரி ஸார்வபௌம தயிதே)
''எல்லா மங்கலங்களுக்கும் இருப்பிடமானவளே! (பவுகநிதே)
''மிக இனிமையானவளே!''(மதுரே)
''பலராலும் துதிக்கப்படுபவளே! '' (மஹிதே)

இப்படி எல்லாம் தோத்திரம்செய்து என்ன வேண்டுகின்றார்?

எல்லா இம்மை நோய்களையும் போக்கி ஸம்ஸாரத்தினின்றும் விடுக்க வல்ல உன் கடாக்ஷமாகிற அலையை என் மேல் சிறிது வீசுவாயாக!

(பவ மூலஹராம் மஹதீம் தே லஹரீம் மயிநிதேஹி)

இக்கவிஞன் 'கவி ஸார்வபௌமன்' என்ற பட்டம்பெற்றதற்கு இச்சுலோக மொன்றின் அமைப்பே சான்றாகலாம்.

''ம்ருது ஹ்ருதயே தயே ம்ருதித காம ஹிதே மஹிதே
த்ருத விபுதே புதேஷு விததாத்ம துரே மதுரே
வ்ருஷகிரி ஸார்வபௌம தயிதே மயி தே மஹதீம்
பவுகநிதே நிதேஹி பவமூல ஹராம் லஹரீம்'' (60)

(தொடரும்)

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

கிட்டும் சுகத்திற்கேற்ப இந்த நம்பிக்கையின் தன்மையும் மாறியமைகிறது. ஆனால் இவற்றை எல்லாவற்றைக் காட்டிலும் நமக்கு என்றும் நன்மை தர வல்லது ஆண்டவனிடத்தில் நாம் கொண்டு விளங்கும் நம்பிக்கையே. மற்றவர்களை நம்பாவிட்டாலும் பரவாயில்லை, இறைவன் ஒருவனை மட்டும் நாம் அந்தரங்க சுத்தியுடன் நம்பினால் போதும். ஏன்? ''கடவுளை நம்பினோர் கைவிடப்படார்''

அத்தகைய உயர்ந்த இறை நம்பிக்கை அதாவது பகவானின் வார்த்தைகளில் நம்பிக்கை இப்பொழுது அர்ஜுனனிடம் காணப்படுகிறது. பகவான் தன்னிடம் கூறியதனைத்தும் உண்மை என்பதை அவன் கண்டு கொள்கிறான்.

அது மட்டுமல்ல. அதுவரை, அர்ஜுனன் கிருஷ்ணனை வெறும் தனது உறவினனாக மட்டும், சாதாரண மானிடனாக மட்டுமே கருதினான். ஆனால் இப்பொழுது அவன் தன் முன்னர் இருப்பது ''ஸாக்ஷாத் பரப்ரம்ம சொரூபமான ஸ்ரீ கிருஷ்ணன்'' என்பதை உணர்ந்து கொண்டு விடுகிறான். தேவர்களாலும், அஸுரர்களாலும், அறியப்பட முடியாத பரம்பொருளை மனிதனாகிய தான் கண்டு கொண்டு விட்டான் என்பது குறித்து அர்ஜுனன் பெருமிதம் அடைகிறான்.

ஏன் தேவர்களாலும் அஸுர்களாலும் இறைவனை அடைய முடியாது.

தேவநிலை என்பது ஒருவன் தான் செய்த புண்ணியக் கருமங்களின் பலனாக அடையப் பெறுவது ஆகும். தேவலோகத்தில் எங்கு நோக்கினும் இன்பம், மகிழ்ச்சி, சுக போகங்கள் தான். சுக போகத்தில் ஆழ்ந்திருக்கும் அளவு ஒருவனது ஆன்மீக நாட்டம் குறையும். நாம் சம்பாதித்த புண்ணியம் பாங்கில் நம் பெயரில் இருக்கும் டெபாசிட் பணத்தைப் போன்றது. பணத்தை எடுக்க எடுக்க பாங்கில் நமது இருப்புத் தொகை குறைவது போல், நாம் சேர்த்து வைத்த புண்ணியம் குறையக் குறைய சொர்க்கத்தில் நம் வாழ்வு குறைந்து கொண்டே போகும். பின் நம் புண்ணியம் முழுதும் செலவழிந்த பிறகு மீண்டும் புவியில் பிறப்பெடுக்க நேரிடும். 'க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி' என்ற கீதை வாக்கியம் இக்கருத்தை நிரூபிக்கிறது. தேவலோகம் இன்ப பூமியாதலால் அங்கே பரம் பொருள் நாட்டம் ஏற்பட வழியில்லை, அதாவது பொதுவாக இன்பங்களுக்கிடையே ஆன்மபோதம் ஏற்பட வழியில்லை என்பது அர்ஜுனனது கருத்து.

அதுபோல பாபத்தின் விளைவே அசுரப் பிறவி. அந்த அசுரப் பிறவியிலும் மேலும் பல தீமைகளைச்செய்து பாபம் கூடிக்கொண்டுதான் போகும். எனவே அந்த நிலையிலும் பகவானை உள்ளபடி உணரும் வாய்ப்புக் கிட்டாது. ஆனால் மனித நிலையோ இந்த இரண்டிற்கும் இடைப்பட்ட நிலை. இந்த நிலையில் இன்பங்களில் ஒரேயடியாக மூழ்கிவிடாமலும், பாபங்களில் ஒரேயடியாகத்தன்னைச்சிக்குண்டுவிடாமலும் காத்துக் கொள்ள மனிதனால் இயலும். அத்தகைய மனிதன் மேற்கொள்ளும் மனப்பூர்வமான முயற்சிகளுக்கேற்ப பகவான் தன்னை அவனுக்கு வெளிப்படுத்திக் கொள்கிறார்.

சூரியன் பூமியைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு பெரியதாகும். இருப்பினும் அது வெகு தூரத்தில் இருப்பதால் அது ஒரு சிறிய தட்டினைப் போலக் காணப்படுகிறது. அது போல பகவான் அளவற்ற மகிமை பொருந்தியவனாயிருந்தும், நமக்கும் அவனுக்குமிடையேயுள்ள தூரத்தினால் அதாவது நாம் நமது ஆணவத்தின் காரணமாகப் புரிந்து கொள்ளாமலி

தேவியருடனும், நம்மாழ்வாருடனும் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி—அத்யோனுற்சவம்-திருப்பதி. திரு. S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.



ருப்பதனுல் அவனது பெருமையை நாம் அறியச் சக்தி அற்றவர்களாயிருக்கிறேம்.

பகவானை ஷட்குண ஸம்பந்நர் என்று அழைப்பதுண்டு. ஆறுகுணங்கள் நிறைந்தவன் என்பது அதன் பொருள் பலம், தர்மம், ஐஸ்வர்யம், வீர்யம், வைராக்கியம், தேஜஸ் ஆகியவையே அவை. இவை எவரிடம் காணப்படுகிறதோ அவர் பகவான். இத்தகைய பகவானது தோற்றத்தின் மகிமையை தானவர்களும், தேவர்களும் அறிய மாட்டார்கள். 'நல்லாரைக் காத்துப் பொல்லாரை இல்லாதாக்குவதற்காகவும் பகவான் உலகில் அவதரிக்கிறுர்' என்ற அவரது பிரபாவம் சில பக்தர்களுக்கு மட்டும் புரிகிறது.

அழியாத புருஷர் என்பதால் பகவான் புருஷோத்தமன் எனப்படுகிறுர். உயிர்களுக்கெல்லாம் அவரே மூல காரணர் என்பதால் அவர் பூதபாலனன் எனவும் அழைக்கப்படுகிறுர். பிரபஞ்சத்தை யெல்லாம் ஆள்பவர் அவரே என்பதால் ஜகத்பதி என்றும் அவர் அழைக்கப்படுகிறுர். அவரது முழு மகிமையை அறிந்து கொள்ள அவரால் தான் முடியுமே ஒழிய வேறு எவராலும்முடியாது. ஏன்? அவருக்கு நிகர் அவரே. வேறு எவரும் இலர். ஒரு காளிதாசனை மற்ருெரு காளிதாசனும், ஒரு ஷேக்ஸ்பியரை மற்ருெரு ஷேக்ஸ்பியருமே அறிந்து கொள்ள முடியும் என்று நாம் சாதாரணமாகச் சொல்லுகிறேம். அனந்த திவ்விய குணங்களை உடைய அதே வேளையில் குணமனைத்தும் கடந்து நிர்குண நிராமய நிஷ்கள சொரூபமாக விளங்குகிற பரம்பொருளை அறிய வேறு எவராலும் இயலாது. அவரால் தான் இயலும். அல்லது அவரது சொரூபத்துடன் ஒன்றிவிட்ட சான்றேரால் இயலும்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் அழகானதொரு உவமானக் கதை சொல்லுவார். அரிய வைரக்கல் ஒன்றை ஒருவன் ஒருசமயம் விற்கும் பொருட்டு கடைத் தெருவிற்கு எடுத்துச் சென்

றுன். அதன் மதிப்பு என்ன இருக்கும் என்று அவன் முதலில் ஒரு கத்திரிக் காய் கடைக்காரனிடம் கேட்டான். ஐந்து கூடைக் கத்திரிக்காய் பெறும் என்று பதில் வந்தது. அவன் மேலும் நடந்தான். அரிசிக் கடைக்காரனி டம் வைரத்தை விலை மதிப்பிடக் கொடுத்தபோது அவன் அது ஒரு மூட்டை அரிசி பெறும் என்றுன். இப் படியாகப் பல பொருள்களை விற்கும் கடைக்காரர்களிடம் வைரத்தைக் கொடுத்து மதிப்பிட முயன்றபோது அவரவர்கள் தத்தம் பொருள்களுக் கேற்பவே அதை மதிப்பிட்டனர். இறுதியில் ஒரு வைர வியாபாரியிடம் அதை அவன் காட்டி அது எவ்வளவு பெறும் என்று கேட்டபோது, அந்த வைர வியாபாரி அந்த அபூர்வ வைரத்தை அப்படியும் இப்படியும் திருப்பிப் பார்த்தான். விலை மதிப் பற்ற அந்தக் கல்லுக்கு விலை போட முடியாது. அவன் திணறியதை அவ அவனது முகபாவம் எடுத்துக் காட்டி யது. கடைசியில் அந்த வைர வியா பாரி, 'இது ஒரு அபூர்வ வைரக்கல். பொதுவாக எங்கும் கிடைக்காதது. இது சுமார் 20 லட்சம் ரூபாய் பெறும்' என்றுன்.

இதுபோலவே நாமும் நம் சிற்ற றிவிற்கு எட்டியவாறு பிரம்மத்தை 'எடைபோட' (விளக்க) முயலுகி ரேம். ஆனல் அந்தப் பிரம்மமோ நமது விளக்கங்களுக்கு எல்லாம் அப் பாற்பட்டு விளங்குகிறது. பிரம்மத் தை பிரம்மத்தால் தான் அறிய முடி யும். இதைத் தான் சாஸ்திரம், 'பிரம்மவித் பிரம்மைவ பவதி' (பிரம் மத்தை அறிபவன் பிரம்மமாகவே ஆகிறுன்) என்கிறது.

இறைவனது மகிமையை விளக்க யாருக்கு இயலும்? இறைவனல் தான் முடியுமே தவிர வேறு எவராலும் இய லாது. சிறந்த இசையின் மகிமையை ஒரு சிறந்த இசை வல்லுநரே விளக்க முடியும். ஒப்பற்ற ஓவியத்தின் மகி மையை ஒரு ஓவியக் கலைஞனல் தான் விளக்கிக் கூற இயலும். மகானின் பெருமையை மகான் ஒருவரால் தான் புரிந்து கொண்டு எடுத்துக் கூற முடி யும். அதுபோல இறைவனின் விபூதி களை இறைவனின் அவதாரமே விளக்க முடியும்.

தன்னுடன் பேசுவது, தனக்கு சாரத்தியம் செய்வது ஸாக்ஷாத் பக வானே என்ற உண்மை புலப்பட்டதும் அர்ஜுனனது ஆவல் பன் மடங்கு அதிகரித்து விடுகிறது. ''தேவே எந்த விபூதிகளைக் கொண்டு நீர் இவ்வுலகங் களெல்லாம் நிரப்பியிருக்கின்றீரோ, அதை மிச்சமின்றி நீரே வர்ணிப்பீ ராக'', என்று கண்ணனை அர்ஜுனன் வேண்டிக் கொள்கிறேன்.

இருட்டு அறையில் உள்ள பொருள் களை விளக்க விளக்கின் ஒளி தேவை. ஏனைய பொருள்களை விளக்கு விளக்க வல்லது. ஆனல் விளக்கை விளக்க எது வல்லது? விளக்கினை விளக்கே விளக்கவல்லது. வேறு எதனலும் முடியாது. அது போல ஸர்வக்ஞன் ஸர்வ சக்தி மான், ஸர்வ லோகநாய கனை ஸர்வேஸ்வரனை ஸர்வேஸ்வ ரனே விளக்க வல்லவராகிறுர்.

அடுத்து அர்ஜுனன் பகவானிடம் கேள்வி ஒன்று கேட்கிறுன்:

கதம் வித்யாமஹம் யோகிம்
    ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயன்|
கேஷு கேஷு ச பாவேஷு
    சிந்த்யோஸி பகவன் மயா || 17 ||

''யோகீசுவரரே! யாண்டும் உம் மையே சிந்தித்து நான் உம்மை அறி வது எப்படி? பகவானே, என்னென்ன பாங்குகளில் நீர் என்னல் சிந்திக்கத் தக்கவர் ஆவீர்?''

மனத்தின் இயல்பு எப்பொழுதும் வெளியே பாய்ந்து செல்வதேயாகும். அரை நிமிட நேரமாவது அலைந் திரியும் மனத்தை அலைவற்றிருக்கு செய்தல் பெரிய சாதனையாகும். ஜபம் தியானம் போன்ற எல்லாப் பயிற்சி களும் அலையும் மனத்தைக் கட்டுப் படுத்துவதற்காகவேயாகும். 'கண்ணு! எனது மனம் சதா புறப்பொருள்களி லேயே போய்க் கொண்டிருக்கிறது என்பது உண்மையேயானினும், அந் தப் பொருள்களை நான் எவ்விதம் பொருள்படுத்தினல் எனது எண்ணம் உம்மைப் பற்றியதாக ஆகி விடும்?' என்று அர்ஜுனன் பகவானிடம் கேட் கிறுன்.

பகவானது அமுத மொழி கேட்கக் கேட்கத் தெவிட்டாதது. எனவே பகவானிடமிருந்தே அவரது விபூதி களைப்பற்றி மேலும் விளக்கமாகக் கேட்டு அறிய அர்ஜுனன் விரும்புவது இயல்பேயாகும். பகவானது யோகத் தையும், விபூதியையும் பற்றி மீண்டும் விரித்துரைக்குமாறு அர்ஜுனன் கண் ணனைக் கேட்டுக் கொள்கிறுன்.

மனிதன் இறைவனை வழிபடுவது எதற்காக? இரண்டு விஷயங்களுக் காகவே. ஒன்று, இவ்வுலகில் இன்பத் தை அனுபவிக்க வேண்டும். இதுபுக்தி. மற்றது பிறப்பற்ற பெருநிலையை அடைய வேண்டும். அது முக்தி. யோகம் என்பது ஈண்டு அனைத்தை யும் அறியும் தன்மையையும், அறிந் ததை ஆளும் தன்மையையும் குறிக் கிறது. எதெதன் மூலம் ஈசுவரன் உபாசிக்கத் தகுந்தவரோ அம்சங்களைத் தும் அவரது விபூதிகளாகும். அத்த கைய விபூதிகளைத் தொகுத்துக்கேட்க அர்ஜுனன் விரும்புகிறுன்.

(இதன் தொடர்ச்சி அடுத்தப் பக்கம்)

# ஸ்ரீ தியாகராஜ ஸுப்ரபாதம்

திரு: எம். வி. ராமநாதகனபாடிகள், திருப்பதி.

லோகோபகாரக மஹாமதி புண்யசீலம்
சாந்தஞ் ச ஸத்ய மமலம் ஹ்யுபகாரசீலம்
பூமண்டலே கிலயஸஸ்தநுநா ப்ரஸன்னம்
ஸ்ரீத்யாகராஜஸுகுணம் சரணம் ப்ரபத்யே ‖28‖

ராஜாங்கதானகனகாதி திரஸ்க்ருதம்தம்
ராஜாதி ராஜமனு மேவ புரஸ்க்ருதம் ஹி ।
தந்மந்த்ர ஷண்ணவதிகோடி ஜபப்ரபாவம்
ஸ்ரீத்யாகராஜ ஸுகுணம் சரணம் ப்ரபத்யே‖29‖

ப்ரஹ்லாத நாரத புரந்தர ராமதாஸ-
பக்தாக்ரகண்ய ஸுஜநாந் பரிகீர்த்தயந்தம் ।
புத்தஞ்ச சுத்த மநகம் ஹ்யரிஷட்விமுக்தம்
ஸ்ரீத்யாகராஜஸுகுணம் சரணம் ப்ரபத்யே ‖30‖

ஸ்ரீவேங்கடாசலபதி:ப்ரியதர்ஸநார்த்தம்
ருத்தோபி தத்ஸமய ஏவ திரஸ்கரிண்யா ।
த்வத்பக்தி கீர்த்தனமுகாத் ஸ்வய மாவிராஸீத்
ஸ்ரீத்யாகராஜஸுகுணம் சரணம் ப்ரபத்யே ‖31‖

ஸ்ரீவேங்கடேச கருணுலஹரீப்ரபாவம்
ஸ்ரீராமநாதகவி மானஸபக்திபாவம் ।
ஸ்ரீத்யாகராஜஸுகுணர்ணவ ஸுப்ரபத்திம்
பக்த்யா படந்த் வநுதினம் ஸ்வமனேரதாப்த்யை
‖ 32 ‖

## மங்களம்

காகர்லவம்சஸம்பூத ராமப்ரஹ்மஸுதாயதே ।
சாந்தாம்பாகர்ப்பஸம்பூத த்யாகராஜாய
மங்களம் ‖ 33 ‖

காவேரீதீரவாஸாய கலிகல்மஷநாசினே ।
கானசாஸ்த்ரப்ரவீணய த்யாகராஜாய மங்களம்
‖ 34 ‖

ஸ்ரீமத் பஞ்சநதக்ஷேத்ரே நித்யவாஸாய யோகினே ।
ஸாகேதாதிப பக்தாய த்யாகராஜாய மங்களம் ‖ 35 ‖

ஸங்கீதசாஸ்த்ர மாலோட்ய க்ருதி கீர்த்தனகாரிணே ।
கலௌ வால்மீகிரூபாய த்யாகராஜாய மங்களம் ‖36‖

த்வந்நாமமுத்ரணேநைவ க்ரியதே கீர்த்தநாநி ஹி ।
நிஷ்காமகர்மசீலாய த்யாகராஜாய மங்களம் ‖ 37 ‖

சிவவிஷ்ண்வைக்யபோதாய நாதப்ரஹ்மஸ்வரூபிணே ।
ஸ்வாந்தஸ்ஸுகாய சாந்தாய த்யாகராஜாய மங்களம்
‖ 38 ‖

அபூர்வராகஸந்தாத்ரே தல்லக்ஷணநிரூபிணே ।
ஸப்தஸ்வரஸ்வரூபாய த்யாகராஜாய மங்களம் ‖ 39 ‖

சதுர்விம்சதிஸாஹஸ்ரக்ருதிகர்த்ரே மஹாத்மனே ।
நாரதாசார்யசிஷ்யாய த்யாகராஜாய மங்களம் ‖ 40 ‖

அஷ்டபஞ்சாக்ஷரீஸார நாமோத்தாரகமூர்த்தயே ।
அஷ்டதிக் க்யாதி விக்யாத த்யாகராஜாய மங்களம்
‖ 41 ‖

ஸங்கீதவித்வத்ப்ருந்தஸ்ய புக்தி முக்தி ப்ரதாயினே ।
நாதோபாஸநரக்தாய த்யாகராஜாய மங்களம் ‖ 42 ‖

ராமநாமப்ரசாராய கானலோகஹிதாய தே ।
நாதகானவிலோலாய த்யாகராஜாய மங்களம் ‖ 43 ‖

ராமநாமஜபோத்ஸாஹ ஸஷண்ணவதிகோடிபி: ।
ஜபஸம்ஸித்திஸம்ப்ராப்த த்யாகராஜாய மங்களம்
‖ 44 ‖

ஸுலபோபாயமார்க்கேண மோக்ஷ ஸாம்ராஜ்ய
தாயினே ।
பக்திப்ரபத்திஸித்தாய த்யாகராஜாய:மங்களம் ‖ 45 ‖

ராமநாதகவேர் வாசா ஸுப்ரபாதா நுமோதக ।
ஸ்தோத்ரேண னேன த்ருப்தாய த்யாகராஜாய
மங்களம் ‖ 46 ‖

ஸ்ரீத்யாகராஜ ஸுப்ரபாத மங்களம் முற்றிற்று.

---

எது மாறும் தன்மையுடையதோ, எது அழியும் இயல்பு கொண்டதோ அது விரைவிலேயே தெவிட்டிப்போய் விடும். ஆனல் எது அழியாததோ, மாருததோ, எது என்றும் இருக்குமோ அது தெவிட்டாதது. அத்தகையது பரம்பொருள் ஒன்று தான். அத்தகைய பரம்பொருளின் நினைவில் எப்பொழுதும் இருப்பது எப்படி என்பதுவே அர்ஜுனனது கேள்வியாகும். உலகில் வாழ்வதற்கிடையில், தனக்கென்று வந்தமைந்த கடமைகளைச் செய்து கொண்டிருப்பதற்கிடையில், யாண்டும் இறைச் சிந்தனையில் லயித்தியிருப்பது எப்படி என்பது அந்தக் கேள்வியின் பொருள். அர்ஜுனன் அன்று பகவானிடம் கேட்ட கேள்வி இன்றும் நம்யாவருக்கும் பொருந்தும். அந்த முக்கியமான கேள்விக்கு பகவான் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் பதில் சொல்ல முனைகிருர். பகவான் கொடுத்த பதிலை இனி ஆராய்வோம்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

## அமைச்சருக்குப் பாராட்டு விழா

திருப்பதியில் 23-9-78 அன்று தி. தி. தேவஸ்தான ஊழியர் சங்கத்தாரால் ஆந்திர மாநில சட்ட அமைச்சர் திரு. என். பாஸ்கர் ராவ் அவர்கள் கௌரவிக்கப்பட்டார். இதனை ஒட்டி அன்று காலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தேவஸ்தான ஊழியர் சங்கத்தின் தலைவரும், தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழு உறுப்பினருமான திரு. ஜி. சந்திர சேகரம் நாயுடு அவர்கள் வரவேற்றுப் பேசுகையில் தி. தி. தேவஸ்தான நிர்வாக செயல் முறையினைப் பன்முகப்படுத்த வேண்டியதன் (decentralization) அவசியத்தினை வலியுறுத்தினார். தொடர்ந்து பேசுகையில், திருமலை திருப்பதி பேருந்து போக்குவரத்தினை மீண்டும் ஆந்திர மாநில அரசிடமிருந்து தேவஸ்தானத்திற்கே ஒப்படைக்க வேண்டும் என்றும் கூறினார். இக்கூற்றினையே பின்னர் பேசிய திருமதி. சி. சந்தோஷம்மா, எம். எஸ். சி. அவர்களும் உறுதிப்படுத்தினார். தி. தி. தேவஸ் தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி உரையாற்றுகையில் தேவஸ்தான ஊழியர்களின் நலனை மனதிற்கொண்டு சட்டங்களுக்குட்பட்டு தாம் மேற்கொண்ட முயற்சிகளையும் பணிகளையும் விளக்கிக் கூறினார்.

பின்னர் தமக்கு வழங்கிய பாராட்டுதல்களுக்கு நன்றி கூறி உரையாற்றிய சட்டத்துறை அமைச்சர் அவர்கள் தம்முரையில் உலக கலாச்சாரத்திலேயே ஒரு குறிப்பிட்ட இடத்தைக் கொண்டு விளங்கும் தெலுங்குக் கலாசாரத்தின் பெருமையையும் சிறப்பையும் மனதிற்கொண்டு, அதற்குச் சிறிதும் இழுக்கு நேராவண்ணம் தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் தம் கடமையினை செவ்வனே ஆற்றுவதே, அவர்கள் திருமலைக்கு வரும் பல்லாயிரக் கணக்கான யாத்திரிகர்களுக்கு ஆற்றும் சிரிய தொண்டாகக் கருதப்படும் என்று கூறினார்.

பிறகு தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் சார்பில் திரு. எம். முனி கிருஷ்ண ரெட்டி அவர்கள் ஊழியர்களின் பிரச்சனைகள் அடங்கிய மனு ஒன்றினைச் சமர்ப்பித்து, திருப்பதியில் சட்டக்கல்லூரி ஒன்று அமைக்கப்பட வேண்டியதன் அவசியத்தை எடுத்துக் கூறி, அதற்குரிய முயற்சிகளை அரசு விரைவில் மேற்கொள்ள வேண்டுமென்று அமைச்சரவர்களை கேட்டுக் கொண்டார்.

இறுதியில் திரு. ஜி. சந்திரசேகரம் நாயுடு அவர்கள் நன்றி நவின்றார்.

## வேத சாஸ்த்ர ஆகம வித்வத் சதஸ்

திருமலையில் 23-9-78 அன்று காலை 11 மணி அளவில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் 13-வது வேத சாஸ்த்ர ஆகம வித்வத் சதஸ் 'நடைபெற்றது. கூட்டத்தினரை வரவேற்றுப் பேசிய தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. ஆனந்த ராவ் முதலியார் அவர்கள் தம்முரையில், மறைந்து கொண்டிருக்கும் வேத ஆகமங்களின் சிறப்பினையும் பெருமையினையும் இளைய தலைமுறையினரிடையே உணர்த்தும் பொருட்டு, திருப்பதியில் தி. தி தேவஸ்தானத்தின் ஆதரவில் இயங்கி வரும் சதஸ், பல முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது என்று குறிப்பிட்டார். தொடர்ந்து பேசுகையில் இதுவரையில் தி. தி. தேவஸ்தானம் வேத் ஆகமத் துறைகளின் பல்வேறு கிளைகளில் 12 தேர்வுகளை நடத்தி வந்துள்ளது என்றும், 380 நபர்கள் தேர்ச்சி பெற்றுள்ளனர் என்றும் கூறினார். மேலும் இந்து தர்மத்தின் பெருமையை உணரும் வகையில் வேத சம்பந்தமான கல்வித் திட்டத்தை மேலும் விரிவாக்க வேண்டிய தன் அவசியத்தையும் தம் பேச்சில் வலியுறுத்தினார். பின்னர் வித்வத் சதஸ் குழுவின் செயலாளர் திரு. கே. சுந்தரசார்யா அவர்கள் ஆண்டறிக்கையினை வாசித்தார்.

விழாவிற்குத் தலைமை வகித்துப் பேசிய தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்கள், வேத உபநிஷத்துக்களின் அருமையை உணர்ந்து, அவை கூறும் கருத்துக்களை உலகிற்குத் தெரியப்படுத்தவும், வடமொழியின் பெருமையை, அதன் அவசியத்தை உணர்த்தவும் தேவஸ்தானம் மேற்கொண்டு வரும் முயற்சிகளை விளக்கிக் கூறினார்.

அதனைத் தொடர்ந்து, வேதங்களில் பொதிந்துள்ள ஆன்மிக உலகாயுத கருத்துக்களைப்பற்றியும் வேத ஆகமங்களில் இளைஞர்க்குப் பயிற்சி அளிக்கும் வகையில் பல பணிகளை மேற்கொண்டு வரும் தேவஸ்தானத்தை பாராட்டியும் ஸ்ரீசைல தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. எஸ். பி. பி. கே. சத்ய நாராயண ராவ், திரு. மாணிக்ய சாஸ்திரி மற்றும் திரு. கோபால சுவாமி ஐயங்கார் ஆகியோர் பேசினர்.

இவ்வாண்டு தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் வேத ஆகமத் துறைகளில் நடைபெற்ற தேர்வுகளில் தேர்ச்சி பெற்ற நபர்களுக்கு பரிசுகள் பல வழங்கி சிறப்புரை ஆற்றிய ஆந்திர மாநில இந்து சமய அறநிலையத் துறை ஆணையர் திரு. கே. புருஷோத்தம நாயுடு அவர்கள் தம்முரையில், வேத ஆகமங்களில் தேர்ச்சி பெற்ற பண்டிதர்களின் உலகாயுத தேவைகளை சமூகம் நன்கு கவனித்துக்கொண்டால்தான், அவர்கள் உற்சாகத்துடன் தாங்கள் கற்றதை பிறருக்குக் கற்றுக் கொடுக்கமுன் வருவார்கள் என்றும், அப்போதுதான் இந்து தர்மக் கோட்பாடுகள் மக்களிடையே நன்கு பரவும் என்றும் கூறினார். இம்முயற்சியில் தன்னலமற்ற வரை சிறந்த தொண்டினை ஆற்றி வரும் தி. தி. தேவஸ்தானத்தை வெகுவாகப் பாராட்டினார்.

பின்னர் தி. தி. தேவஸ்தான கல்வி அலுவலர் திரு. பி. ரங்கய்யா அவர்கள் நன்றி நவின்றார்.



தொடர் கட்டுரை

# முக்கவி கண்ட காப்பியம்

## “சுந்தர காண்டம்”

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி

இராவணனுடைய மாளிகையில் ஹநுமான் நுழையும் போது பல கெட்ட சகுனங்கள் அவனுக்குத் தென்பட்டதாகக் கம்பர் கூறுகிறார். மற்ற இராமாயணங்களில் இவ்விபரம் தெரிவிக்கப்படவில்லை. அத்யாத்ம ராமாயணத்தில் எடுத்த எடுப்பிலேயே ஹநுமான் அசோகவனத்தை அடைந்ததாகக் கூறப்பட்டுள்ளது. துளசிதாஸர் இராவணனுடைய மாளிகையை வர்ணிக்கிறார்.

**भवन एक पुनि दीख सुहावा ।**
**हरि मंदिर तहँ भिन्न बनावा ।।**
**रामायुध अंकित गृह सोभा बरनि न जाइ ।**
**नवतुलसिकाबृंद तहँ देखि हरष कपिराइ ।।**

இராவணனின் மாளிகையில் பார்க்க வேண்டியது ஒன்றுமில்லை என்றெண்ணி, விபீஷணனின் மாளிகைக்கு வந்தார். அங்கே மாளிகைக்கு இரு புறத்திலும் சங்கு, சக்ரம் இவ்விரண்டும் சித்தரிக்கப்பட்டிருப்பதையும், மாளிகையைச் சுற்றி துளசிச் செடிகள் வளர்ந்திருப்பதையும் பார்த்ததும் இது ஓர் பாகவதன் வீடாக இருக்கலாம் என தீர்மானித்து இன்னும் கொஞ்சம் கவனமாகப் பார்த்தார். அப்பொழுது இராமனின் வில், அம்பு போன்ற சில குறிகளைப் பார்த்தார். மேலும் எவனுடைய சரீரத்தில் வில், அம்பு, சங்கு, சக்ரம் காணப்படுகிறதோ. அவன் உத்தம ஸம்ஸ்காரத்தையுடையவனென்றும், புண்யம் செய்தவனென்றும், பக்திமான் என்றும் சுருதியில் கூறப்பட்டுள்ளது.

**सुपर्णं बस्ते मृगोऽस्याः दन्तो गोभिः सन्नद्धा**
**तति प्रसूता ।**
**यात्रा नरः संच विच द्रवन्ति तत्रास्मभ्यमिषवः**
**शर्मं यं सन् ।। ४८ ।।**

**ऋजीते परिवृङ्धिनोऽश्मा भवतु नस्तनूः ।**
**सोमोऽधिब्रवीतु नोऽदितिः शर्मं यच्छतु ।।४९।।**
**(यजुवे-अ-मं-२९-४८-४९)**

**पवित्रं ते विततं ब्रह्मणस्पते प्रभुर्गात्राणि पर्येषि**
**विश्वतः ।**
**अतप्ततनूर्न तदामेऽश्वते श्रृतास इद्वहन्तस्त-**
**त्समाशत ।।**
**( ऋग्वे-मं-९-सू-८३-मं-९ )**

**चमूषच्छ्येनश्शकुनो विभृत्वा गोविन्दुर्द्रप्स:**
**आयुधानिबिभ्रत ।।**
**अपामूर्मि स च मानस्समुद्रतुरीयं धाम महिषो**
**विवक्ति**
**( साम-उत्तरार्चिके-अ-१-प्रपाठ-५-मं-३ )**

மேலும்,

**पशुपुत्रादिकान्सर्वान्गृहोपकरणानि च ।**
**अंकयेच्छङ्खचक्राभ्यां नाम कुर्याञ वैष्णवम् ।।**

என்றும் கூறப்படுகிறது.

வைஷ்ணவ மதத்தில் தன்னுடைய பசு, பிள்ளைகள், வீடு, மற்ற சாமான்கள் முதலியவைகளில் சங்கு-சக்ர முத்திரைகளை பொறிக்க வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது.

ஸகல விதமான புஷ்பங்கள் இருந்தாலும், அங்கு துளசி என்பது இல்லையானால் அங்கே இராகவன் பிரஸன்னமாக இருக்கமாட்டான். இராமனுக்கு துளசி மிகவும் பிரியமானது என்பதை ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் அழகாகப் பாடியுள்ளார். ''துளசிதள முலசே ஸந்தோஷமுக பூஜிந்து.'' என்ற கீர்த்தனையில் காணலாம். பாத்ம புராணத்தில் ஸ்ருஷ்டி கண்டத்திலும், பூமிகண்டத்திலும் துளசியின் மஹிமையைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஆகையால் விபீஷணனின் மாளிகையில் இவ்விதமான வைஷ்ணவ அடையாளங்கள் காணப்பட்ட படியால் இங்குள்ளவன் பாகவதோத்தமன் என்று ஹநுமான் நினைத்து, இந்த அரக்கக் கூட்டத்தில் யார் இவன் என்று யோசித்துக் கொண்டிருக்கும்பொழுது, விபீஷணன் விழித்துக் கொள்ள ஆரம்பித்தான். அவ்வமயம்,

''இராம! இராம!!'' என்று சொல்லிக் கொண்டே விழித்துக் கொண்டிருப்பதைப் பார்த்த ஹநுமான் மகிழ்ச்சியடைந்தார். உடனே ஹநுமான் தன்னை பிராம்மண உருவில் மாற்றிக் கொண்டு விபீஷணனைச் சந்தித்தார்.

**विप्ररूप धरि बचन सुनाए ।**
**सुनत बिभीषन उठि तहँ आए ।।**
**करि प्रनाम पूँछी कुसलाई ।**
**बिप्र कहहु निज कथा बुझाई ।।**

விபீஷணன், பிராம்மண உருவில் வந்த ஹநுமானைப் பார்த்து வணங்கி, விபரம் கேட்டான். ஹநுமான் தன் விருத்தாந்தத்தைக் கூறினார். விபீஷணன் ஹநுமானை அணைத்துக் கொண்டு கூறுகிறான். ''ஹே! பிரபுவே! நான் இங்கு மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறேன். இராமனிடம் கூறி ஏதாவது பரிகாரம் செய்தால் நல்லது'' என்று. அதற்கு ஹநுமான் ''விபீஷணா! கவலைப்படாதே! இராமன் ஆச்ரித ரக்ஷகன், ஸர்வ மங்கள ஸம்பன்னன். என்னால் என்ன முடியும். ஆனால் நீயோ புனிதமானவன். உன் பெயரைச் சொன்னால் ஜன்ம ஸாபல்யமடையலாமெனச் சொல்லலாம். பரம பாகவதோத்தமர்களில் நீயும் ஒருவனல்லவா? ஆகையால் உனக்கு இராமனின் அனுக்ரஹம் கட்டாயம் கிடைக்கும்'' என்று கூறி, சீதை இருக்குமிடத்தை அறிந்து கொண்டு கொசு போல் உருவமெடுத்துக் கொண்டு புறப்பட்டார் என்று துளசி இராமாயணத்தில் காணப்படுகிறது.

ஹநுமான் அசோக வனத்தில் பல இடங்களில் தேடிவிட்டு கடைசியாக அங்குள்ள நதியின் கரையில் இருந்த மரத்தின் மேல் மறைந்திருந்தார்.

**यदि जीवति सा देवी ताराधिपतिभानना ।**
**आगमिष्यति सावश्यं इमां शिवजलां नदीम् ।।**
**एवं तु मत्वा हनुमान् महात्मा प्रतीक्षमाणो**
**मनुजेन्द्रपत्नीम्**
**अवक्षेमाणश्व ददर्श सर्वं सुपुष्पिते पर्णघने**
**निलीनः ।**

சீதை ஜீவித்திருந்தால் கட்டாயம் இந்த நதிக்கு வந்து சேருவாள் என்ற நம்பிக்கையுடன் ஹநுமான் அந்த இடத்தில் தங்கினார். வால்மீகி கூறுகிறார் “सन्ध्याकालमनाः श्यामा” என்று. பெண்கள், சாயங்காலம் இறைவனை வழிபடுவது என்பது தொன்று தொட்டு வரும் முறையாகும். ஹநுமான் மரத்தின் மேல் ஏறி அசோக வனத்தைச் சுற்றுமுற்றும் பார்த்தார். அவ்விதம் பார்க்கும் பொழுது ஒரு மரத்தின் அடியில் சீதையைப் பார்த்தார். அப்பொழுது சீதையின் நிலையை வர்ணிக்கிறார் வால்மீகி. (தொடரும்)

# ராசிபலன் (1-11-78 முதல் 30-11-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



### மேஷம்:

*[அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

ராகுவினுல் பணவரவு. குருவினுல் கவலைகள். சனியினுல் தன் மக்களிடமிருந்து பிரிவு அல்லது பணநஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள். சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல், இறுதி 15 நாட்களின் போது உடல் நலக்குறைவு, அல்லது மனைவிக்கு மனையமைதியின்மை. சுக்ரனுல் பெண்களின் மூலம் கவலைக்குள்ளாதல். செவ்வாயினுல் பொருள்நஷ்டம் அல்லது உடம்பில் அடிபடுதல். புதனுல் புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல் அல்லது வெற்றி அல்லது பணவரவு.



### ரிஷபம்:

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் கவலை. குருவினுல் ஏமாற்றங்கள் அல்லது அலுவலகக் கவலைகள். சனியினுல் பணநஷ்டம் அல்லது உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது நண்பர்களுடன் கருத்து வேறுபாடுகள். சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலமேன்மை, எதிரிகளை வெற்றி கொளல். இறுதி 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல். சுக்ரனுல் உடல்நலம் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். செவ்வாயினுல் மனைவியுடன் கருத்து வேறுபாடுகொள்ளுதல் அல்லது வயிறு அல்லது கண் சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதிப்படல். புதனுல் எல்லா பக்கங்களிலிருந்தும் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்,



### மிதுனம்:

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].*

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள். குருவினுல் பணவரவு. மற்றும் வெற்றி. சனியினுல் பொருள் வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப் பெறல் அல்லது வாகன வாய்ப்பு மற்றும் உடல் நலமேன்மை. சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல்நலக் குறைவால் அல்லது எதிரிகளால் கவலைக்குள்ளாதல், இறுதி 15 நாட்களின் போது உடல் நலமேன்மை, எதிரிகளை வெற்றி கொளல். சுக்ரனுல் பணவரவு அல்லது நல்ல நண்பர்கள், அல்லது வீட்டிற்கு புதிய விருந்தினர் வருகை மற்றும் பெரியோர்களின் பாராட்டுதல்களை பெறல். செவ்வாயினுல் எதிரிகளை வெற்றி கொள்ளுதல், அதிக பண வரவு, புதிய வீட்டுச் சாமான்கள் வாங்கப்பெறல். புதனுல் வெற்றியும் மகிழ்ச்சியும்.



### கடகம்:

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

ராகுவினுல் பணவரவு. குருவினுல் கருத்து வேறுபாடுகள், பணநஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். சனியினுல் பொருள் நஷ்டம் மற்றும் மன மகிழ்ச்சியின்மை. சூரியனுல் உடல் நலக்குறைவு அல்லது எதிரிகளால் துன்பங்கள் ஏற்படல். சுக்ரனுல் நல்ல நண்பர்கள், புதிய முயற்சிகளை மேற்கொளல். செவ்வாயினுல் எதிரிகளால் அல்லது உடல்நலக்குறைவால் அல்லது தன் மக்களால் கவலைக்குள்ளாதல். புதனுல் மனைவியுடன் அல்லது தன் மக்களுடன் கருத்து வேறுபாடு கொள்ளுதல்.



### சிம்மம்:

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

ராகுவினுல் பணநஷ்டம். சனியினுல் உற்றார் உறவினருடன் பிரிவு அல்லது துன்பங்களுக்குள்ளாதல். அல்லது உறவினர்களுக்கு தொண்டு செய்தல். குருவினுல் பிரயாணம் மற்றும் உடல்நலம் கெடல். சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பணவரவு அல்லது நன்மதிப்பு இறுதி 15 நாட்களின் போது உடல்நலம் கெடல். சுக்ரனுல் பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல் அல்லது வெற்றி அல்லது மதிப்புயர்தல். செவ்வாயினுல் உடல்நலம் பாதிக்கப்படல் அல்லது இரத்தம் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல் அல்லது தீய நட்புறவினுல் துன்பங்களுக்குள்ளாதல். புதனுல் பொருள் வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி.



### கன்னி:

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

ராகுவினுல் துன்பங்கள். குருவினுல் பணவரவு அல்லது மதிப்புயர்தல் சனியினுல் கவலைகள். சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணநஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல் அல்லது ஏமாற்றப்படல்; இறுதி 15 நாட்களின் போது பணவரவு அல்லது மக்கட்பேறு அல்லது தானிய வகைகள் கிடைக்கப்பெறல் அல்லது மதிப்புயர்தல் மற்றும் குடும்பத்தில் மகிழ்ச்சி. செவ்வாயினுல்பிள்ளைகள் மூலம் பணவரவு அல்லது தவருன வழியில் பணவரவு. புதனுல் புதிய நண்பர்கள் ஆனுல் தவருன நடவடிக்கையினை மேற்கொள்வதால் அஞ்சுதல்.



### துலா:

*[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் பொருள்நஷ்டம் குருவினுல் பணநஷ்டம் அல்லது மதிப்புக் குறைதல். சனியினுல் பணவரவு, மகிழ்ச்சி. சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணமும், உடல்நலம் கெடலும் அல்லது பண நஷ்டம் இறுதி 15 நாட்களின் போது ஏமாற்றப்படல் அல்லது பணநஷ்டம் அல்லது கண சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல். சுக்ரனுல் மகிழ்ச்சி. செவ்வாயினுல் அலுவலகக்கவலே அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல், அல்லது வீட்டில் திருடு போதல் அல்லது உடல் நலம் கெடல். புதனுல் இகழ்ச்சிக்குள்ளாதல்.



**விருச்சிகம் :**

*[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]*

ராகுவினுல் மகிழ்ச்சி, குருவினுல் பணவரவு அல்லது வெற்றி அல்லது தானியவகைகள் கிடைக்கப்பெறல் அல்லது மக்கட்பேறு. சனியினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக்குறைதல் அல்லது கல்வி தடைபடுதல். சூரியனுல் பணநஷ்டம் அல்லது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல். சுக்ரனுலும், செவ்வாயினுலும் கெடுதிகள் ஏற்படல். புதனுல் கருத்து வேறுபாடுகளினுலோ அல்லது தீய நபர்களின் ஆலோசனேகளே ஏற்றுக்கொள்வதாலோ பொருள் நஷ்டம்.



**தனுசு :**

*[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].*

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள். குருவினுல் உடல்நலம் கெடல் அல்லது பிரயாணம். சனியினுல் தீயநடவடிக்கைகளே மேற்கொளல் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலம் கெடல். சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது மதிப்புயர்தல் அல்லது பணவரவு அல்லது உடல்நலமேன்மை. ஆனுல் இறுதியில் கெடுதிகள் ஏற்படல். சுக்ரனுல் புதிய நண்பர்கள், பணவரவு; செவ்வாயினுல் கவலேகள். புதனுல் இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல்.



**மகரம் :**

*[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].*

ராகுவினுல் தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல். குருவினுல் மகிழ்ச்சி. சனியினுல் உற்றூர் உறவினருடன் பிரிவு. சூரியனுல் வெற்றி, மதிப்புயர்தல், பணவரவு, உடல்நலமேன்மை. சுக்ரனுல் கருத்து வேறுபாடு, இகழ்ச்சிக்குள்ளாதல். செவ்வாயினுல் வெற்றி புதனுல் பண வரவு, மகிழ்ச்சி, புதிய நண்பர்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு.



**கும்பம் :**

*[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் கவலேகள்; சனியினுல் பிரயாணம், குருவினுல் மனயமைதியின்மை; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல்நலம் கெடல் அல்லது பணநஷ்டம் அல்லது ஏமாற்றங்களுக்குள்ளாதல் இறுதியில் முயற்சிகள் வெற்றியடைதல். சுக்ரனுல் பண்வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், நன் முயற்சிகளில் ஈடுபடல், மகிழ்ச்சி. செவ்வாயினுல் அதிக பணவரவு. புதனுலும் பணவரவு மற்றும் வெற்றி.



**மீனம் :**

*[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].*

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள். சனியினுல் உடல்நலமேன்மை, வெற்றி குருவினுல் பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது புதிய வீட்டுச் சாமான்கள் அல்லது வீடு அல்லது வாகனம் அல்லது மக்கட்பேறு. சூரியனுல் உடல்நலம் கெடல் அல்லது மனேவிக்கு மனமகிழ்ச்சியின்மை அல்லது பொருள்நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். சுக்ரனுல் மகிழ்ச்சி அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது பணவரவு அல்லது புதியவீடு. செவ்வாயினுல் இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது பண நஷ்டம். புதனுல் ஏமாற்றங்கள்.



## ஸ்ரீ வேதாந்த தேசிகன்

ஸ்ரீ தேசிகர் இன்றைக்கு சுமார் 700 ஆண்டுகளுக்கு முன் ஒரு விபவ வருஷம் (கி. பி. 1268) புரட்டாசி மாதம் திருவோணத் திருநக்ஷத்திரத்தில், காஞ்சிக்கு அருகே தூப்புல் எனும் திருத் தலத்தில் அவதரித்தார். திருவேங்கடவனின் திருநக்ஷத்திரத்தையும், மாதத்தையும் ஸ்ரீ தேசிகரும் கொண்டு விளங்குவதால் அவருக்கு 'வேங்கடநாதன்' என்றே பெயரிடப்பட்டது. ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தமே உண்மையான வைதீக ஸித்தாந்தமென்று நிலேநாட்டியதற்கு, ஸ்ரீ ரங்கநாதராலும், நாச்சியாராலும் முறையே 'ஸ்ரீ வேதாந்தா சார்யா' என்றும் 'ஸர்வதந்தா ஸ்வதந்தரர்' என்றும் அழைக்கப்பட்டார். திருமலேயில், வேங்கடவருக்கு புரட்டாசி மாதத்தில் நடைபெறும் பிரம் மோற்சவத்தின் போது, ஸ்ரீ தேசிகன் இறைவனது அம்சமாக விளங்குவதால், தேசிகரின் சாத்துமுறை கீழ்த் திருப்பதியில் ஐப்பசிமாதம் திருவோணத்தில் (29—10—78 முதல் 7—11—78) நடைபெறுகின்றது. இம்முறை இத்திருத்தலத்தில் மட்டுமே அனுசரிக்கப்படுகின்றது. மூன்ருண்டுகளுக்கொருமுறை அதிகமாதம் வருவதால், அப்போதுமட்டும் தேசிகரின் சாத்துமுறை நவராத்திரியின்போது விஜயதசமி அன்று நடைபெறுகிறது.

**தகவல்:** ஏ. கே. ராமாநுஜம்-திருப்பதி.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501




திருமலை திருப்பதி தேவஸ்தான

ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

## ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்)பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

## கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

## உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

## வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

## பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

## படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 455 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 220 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 280 |
| தேன்குழல் | ,, | 200 |

## நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

சானூருக்கு . . . . . வருகை புரியுங்கள் !



# ஸ்ரீ பத்மாவதி தேவி பிரம்மோற்சவம்

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 25—11 -78 | சனி | — | சேனாபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 26—11—78 | ஞாயிறு | திருச்சி உற்சவம், துவஜாரோஹணம் | சிறிய சேஷ வாஹனம் |
| 27—11—78 | திங்கள் | டாஞ்ஜான் உற்சவம் | ஹம்ஸ வாஹனம் |
| 28—11—78 | செவ்வாய் | முத்துப்பந்தல் வாஹனம் | ஸிம்ஹ வாஹனம் |
| 29—11—78 | புதன் | கல்பவிருக்ஷ வாஹனம் | ஹனுமந்த வாஹனம் |
| 30—11 – 78 | வியாழன் | பல்லக்கு உற்சவம் [மாலை-வசந்தோற்சவம்] | கஜ வாஹனம் |
| 1—12—78 | வெள்ளி | சர்வபூபால வாஹனம் | கருடோற்சவம் |
| 2—12 —78 | சனி | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப் பிரபை வாஹனம் |
| 3—12—78 | ஞாயிறு | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 4—12 – 78 | திங்கள் | பல்லக்கு உற்சவம், திருச்சி உற்சவம் அவப்பிரதோற்சவம் [சக்ரஸ்நாநம்] | திருச்சி, துவஜாவரோஹணம் |

இவ்விழா நாட்களின் போது மாலை நேரங்களில் ஊஞ்சல் சேவை நடைபெறும்.